





# சித்திர வாசகம்

## ஐந்தாம் புத்தகம்

மாணிக்கம் & அப்புஸ்வாமி









## உபாத்தியாயர் குறிப்புக்கள்

1. மௌனவாசிப்பு: மௌனவாசிப்பில் வாய்விட்டுச் சொல்லுத லாவது உதட்டசைவாவது தோன்றவே கூடாது.

பாடம் 13, 15, 20, 33: பொருளுணர் திறமை குறையாதபடி மேன் மேலும் விரைவாகப் படிக்கச்செய்வதே இந்த அப்பியாசங்களின் நோக்கம். இந்த அப்பியாசப் பாடங்களை மாணவர்கள் படிக்கத் தொடங்குமுன் அவர்கள் செய்யவேண்டியது என்ன என்று மிகவும் தெளிவாக உபாத்தியாயர் அவர் களுக்குச் சொல்லவேண்டும்:—(1) அப்பியாசத்தை வாய்விட்டுப் படிக்கக் கூடாது; உதட்டசைவையும் அறவே நீக்க முயலுதல் நன்று. (2) அப்பியா சத்திலுள்ள ஒவ்வொரு சொல்லையும் விடாதபடி மாணவன் படிக்கவேண்டும். (3) அப்பியாசத்தை ஒரே ஒரு தடவைதான் படிக்கவேண்டும். (4) அப் பியாசத்தின் கடைசி வார்த்தையைப் படித்தவுடன் புஸ்தகத்தை மூடிவிட வேண்டும். (5) பயிற்சிப் பகுதியில் கேட்கப்படும் கேள்விக்கோ, கேள்வி களுக்கோ உடனே விடை எழுதிக் கீழே வைக்கவேண்டும்.

வகுப்பில் இந்த அப்பியாசத்தை மிகவும் விரைவாகப் படித்து முடித்து, விடை எழுதும் முதல் மூன்று பேருக்கு ஆகும் நேரத்தை உபாத்தியாயர் குறித்துக்கொள்ளவேண்டும். இந்த நேரத்தையும் இந்தச் சோதனை நடந்த தேதியையும் குறித்துக்கொண்டு அப்பியாசத்தில் உள்ள சொற்களையும் எண் ணிக் குறித்துக்கொள்ள வேண்டும்.

2. கட்டுரை எழுதுதல்: கட்டுரை எழுதத் தொடங்குமுன் விஷயத் தைப்பற்றி மாணவர்களோடு பேசி, கேள்விகள் கேட்டு, அவர்களைச் சிந்திக்கச் செய்யவேண்டும். பிறகு அவர்களைத் தாங்கள் தெரிந்துகொண்ட விஷயங்களை முறைப்படுத்தி, ஒழுங்கான திட்டம் வகுத்துக்கொண்டு, பிறகு தொடக்கம், நடுவு, முடிவு என்று வரிசைப்படுத்திச் சிறு கட்டுரைகள் எழுதச்செய்ய வேண்டும். ஒரே பாராவில் முரண்படும் பல விஷயங்களைச் சொல்லாமலும், கட்டுரையின் போக்குச் சீராக இருக்குமாறும் கவனிக்கச் செய்யவேண்டும். எழுதி முடித்ததைத் திரும்பப் படித்துப் பிழைகளைத் திருத்திக்கொள்ளச் செய்யவேண்டும். இந்த வழக்கம் பிடிபடுவது அவசியம்.

# சித்திர வாசகம்

## ஐந்தாம் புத்தகம்

CHITRA VASAGAM FIFTH BOOK

For Class V or Standard V

ஜே. பி. மாணிக்கம், எம். ஏ., எல். டி.

பெ. நா. அப்புஸ்வாமி, பி. ஏ., பி. எல்.




THE CHRISTIAN LITERATURE SOCIETY FOR INDIA

(UNITED SOCIETY FOR CHRISTIAN LITERATURE)

MADRAS BANGALORE MYSORE COLOMBO

1949

*Eighth Edition (Revised) 1949*

*Approved by the Madras Text-Book Committee—Vide Fort St. George Gazette dated 24th May 1949, Part I, page 3, Part II, page [illegible]*

*Approved by the Director of Education, Ceylon, for use in Schools—Vide No. T.T.B.C. 5/43, dated 4th May, 1943.*



## முகவுரை

1939 ஆம் வருஷத்தில் அரசாங்கத்தார் வெளியிட்ட ஆரம்பப் பள்ளிக்கூடப் போதனைத் திட்டத்தையும், அந்தத் திட்டத்தை விளக்கும்பொருட்டு அவர்கள் 1940 ஆம் வருஷத்தில் வெளியிட்ட உபாத்தியாயர் குறிப்புக்களையும் வெகு ஜாக்கிரதையாகப் பின்பற்றி நாங்கள் சித்திர வாசகம் என்னும் வாசகத் தொடரை எழுதியிருக்கிறோம்.

இந்தப் புத்தகத்தில் காணப்படும் ஸ்ரீ தேசிகவிநாயகம் பிள்ளை இயற்றிய ஆறு, கடல் என்னும் பாடல்களை அவர்களின் அனுமதியின்பேரிலும், ஸ்ரீ சி. சுப்பிரமணிய பாரதி இயற்றிய முரசு என்னும் பாட்டைச் சென்னை பாரதிப் பிரசுராலயத்தாரின் அனுமதியின்பேரிலும், கோசுவின் வெற்றி என்னும் பாட்டை ஸ்ரீ பெ. நா. அப்புஸ்வாமியின் அனுமதியின்பேரிலும், வாழ்க! வாழ்க!! என்னும் பாட்டை ஸ்ரீ நாமக்கல் வெ. ராமலிங்கம் பிள்ளை அவர்களின் அனுமதியின்பேரிலும் சேர்த்திருக்கிறோம்.

இவர்கள் யாவருக்கும், இந்தப் புத்தகம் அச்சேறுவதற்கு உதவிபுரிந்த பேராசிரியர் ஸ்ரீ எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்களுக்கும், வித்துவான் எம். ஷண்முகம் பிள்ளை அவர்களுக்கும், ஸ்ரீ ஏ. டி. கிருஷ்ணமாச்சாரியவர்களுக்கும் எங்கள் மனமார்ந்த வந்தனங்கள் உரியன.

ஆசிரியர்கள்.

## பொருள் அடக்கம்


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | சிற்றரசனும் பேரரசனும் ... ... ... | 5 |
| 2. | கோசுவின் வெற்றி (பெ. நா. அ.) ... ... | 9 |
| 3. | சிங்கம் ... ... ... ... ... | 14 |
| 4. | அப்பியாசம் (படத்தைப் பார்த்துக் கதை எழுதுதல்) | 20 |
| 5. | கதை எழுதுதல் ... ... ... ... | 21 |
| 6. | ஒட்டுச்சல்லி ... ... ... ... | 22 |
| 7. | எறும்புகள் (முதற் பாகம்) ... ... ... | 27 |
| 8. | எறும்புகள் (இரண்டாம் பாகம்) ... ... | 30 |
| 9. | வழக்கின் பயன் ... ... ... ... | 34 |
| 10. | அப்பியாசம் (படத்தைப் பார்த்துக் கதை எழுதுதல்) | 40 |
| 11. | கதை எழுதுதல் ... ... ... ... | 41 |
| 12. | கடிதம் ... ... ... ... ... | 42 |
| 13. | அப்பியாசம் (மௌன வாசிப்பு) ... ... | 45 |
| 14. | கம்பர் ... ... ... ... ... | 46 |
| 15. | அப்பியாசம் (மௌன வாசிப்பு) ... ... | 49 |
| 16. | ஆறு (சி. தேசிகவிநாயகம் பிள்ளை) ... ... | 50 |
| 17. | இன்னும் இரண்டு வரி ... ... ... | 52 |
| 18. | ஒட்டகைச்சிவிங்கி (சுயசரிதை—முதற் பாகம்) ... | 58 |
| 19. | ,, ,, (இரண்டாம் பாகம்) | 63 |
| 20. | அப்பியாசம் (மௌன வாசிப்பு)... ... ... | 69 |
| 21. | கோடைக்கானல் பிரயாணம் ... ... ... | 70 |
| 22. | தேனீப்படை ... ... ... ... | 77 |
| 23. | கட்டுரை எழுதுதல் ... ... ... ... | 83 |
| 24. | இக்காலத்து வாகனங்கள் ... ... ... | 84 |
| 25. | முரசு (பாரதி) ... ... ... ... | 90 |
| 26. | காலையும் மாலையும் (நாடகம்)... ... ... | 92 |
| 27. | பறவைக் கூடுகள் ... ... ... ... | 99 |

பக்கம்

28. பத்திரிகைச் செய்தி ... ... ... 106
29. கட்டுரை எழுதுதல் ... ... ... ... 107
30. உண்மைத் தைரியம் (முதற் பாகம்) ... ... 108
31. ,, (இரண்டாம் பாகம்) ... 115
32. அரசாங்கம் ... ... ... ... 121
33. அப்பியாசம் (மௌன வாசிப்பு) ... ... 125
34. அல்ஹாஸன் ... ... ... ... 126
35. பத்திரிகைச் செய்தி ... ... ... ... 129
36. கடல் (சி. தேசிகவிநாயகம் பிள்ளை) ... ... 130
37. புலியும் பிராமணனும் (வீரமார்த்தாண்ட தேவர்) ... 131
38. கடிதங்கள் ... ... ... ... 133
39. நன்னெறி ... ... ... ... 136
40. நல்வழி ... ... ... ... 137
41. வாழ்க! வாழ்க!! (நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை) ... 138
42. பழமொழிகள் ... ... ... ... 139
43. குறிப்புக்கள் ... ... ... ... 140

# 1. சிற்றரசனும் பேரரசனும்



முன்னொரு காலத்திலே சிற்றரசன் ஒருவன் தன்னுடைய பரிவாரத்தோடு புறப்பட்டுத் தலயாத்திரை போனான். போகிற வழியில், அந்நிய நாட்டுப் பேரரசனுடைய தலைநகர் ஒன்றின் வழியாகப் போகவேண்டியிருந்தது. அந்த நகரத்தில் அவன் பரிவாரத்தோடு வந்திருப்பதை அறிந்துகொண்ட அப்பேரரசன் அச்சிற்றரசனைத் தன்னுடைய அரண்மனையிலே விருந்திற்கு அழைத்தான்.

அந்தச் சிற்றரசனும் அந்த அழைப்பைச் சந்தோஷமாக ஏற்றுக்கொண்டு, தன்னுடைய சிறு பரிவாரத்தோடு அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தான். உள்ளே சென்றதும் அந்த நாட்டு வேந்தனும் அவ

னுடைய சபையோர்களும் அங்கிருந்த ஆசனங்களி லெல்லாம் உட்கார்ந்திருப்பதைக் கண்டான். வந்தவர் கள் உட்காருவதற்கு ஆசனங்கள் இல்லை.

ஆயினும் அரசன் எழுந்திருந்து, சிற்றரசனைப் பார்த்து, "வாருங்கள், வாருங்கள். உங்களைப் பார்த் தது வெகு சந்தோஷம். உட்காரவேண்டும்" என்று சொல்லிவிட்டுத் தான் முன்போலவே உட்கார்ந்து கொண்டான். அவன் எழுந்திருந்தபொழுது அவ னோடுகூட எழுந்து நின்ற அவனுடைய சபையோர் களும் முன்போலவே தங்கள் ஆசனங்களில் உட்கார்ந்து கொண்டார்கள். ஆதலால் வந்தவர்களுக்கு உட்கார ஆசனம் இல்லை. வந்த சிற்றரசன், அவ்வரசன் வேண்டு மென்றே இவ்வாறு செய்தான் என்று அறிந்தான். ஆனாலும் முகம் கோணமல் புன்சிரிப்போடு தான் மேலே போர்த்திருந்த விலையுயர்ந்த சால்வையை எடுத்து மடித்துக் கீழே போட்டு, அதன்மேல் உட்கார்ந்து கொண்டான். அவன் அப்படிச் செய்வதைக்கண்டு அவனுடைய பரிவாரத்தில் ஒவ்வொருவனும் தன் னுடைய சால்வையை மடித்துப்போட்டு அதன்மேல் உட்கார்ந்துகொண்டான். இதைப் பார்த்த பேரரசன் சற்றே வியப்படைந்தான்.

பிறகு விருந்து நடந்தது. சிற்றரசன் குதூகல மாகப் பேசிக்கொண்டு உற்சாகமாக இருந்தான். அவனை விருந்திற்கு அழைத்த அரசன் அப்பொழுது சற்றே வெட்கமடைந்தவன்போல் காணப்பட்டான். தான் செய்தது கௌரவமான காரியம் அன்று என்பது அவ னுக்குக் கொஞ்சம் கொஞ்சமாகப் புலப்பட்டுக்கொண்டே வந்தது. விருந்தும் அதன்பிறகு நடந்த நடனக்கச்சேரி யும் முடிந்த பிறகு சிற்றரசன் அரசனுக்கு வந்தனம்

கூறி, விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டான். அவன் வெளியே செல்லும்பொழுது, தான் கீழே போட்டு உட்கார்ந்திருந்த மிக விலையுயர்ந்த சால்வையை எடுத்துக் கொண்டு போகவில்லை. அவனுடைய பரிவாரத்தில் இருந்தவர்களும் அவனைப் போலவே நடந்துகொண்டார்கள். சால்வைகள் எல்லாம் கீழே கிடந்தன.

மிகவும் விலையுயர்ந்த சால்வைகளை அவர்கள் லக்ஷியம் செய்யாமல் அப்படியே போட்டுவிட்டுப் போவதைக் கண்ட அரசன் சிற்றரசனைப் பார்த்து, "மறந்து விட்டீர்களா? உங்கள் சால்வைகளை வைத்து விட்டுப் போகிறீர்களே!" என்று ஞாபகப்படுத்தினான்.

அதற்குச் சிற்றரசன், "ஐயா, மன்னிக்கவேண்டும். விருந்தாளிகள் விருந்துச்சாலையில் தாங்கள் உட்காரும் ஆசனங்களைத் தூக்கிக்கொண்டு போகும் வழக்கம் எங்கள் தேசத்திலே இல்லை" என்று புன்சிரிப்போடு பதில் சொல்லிவிட்டுத் தன் பரிவாரத்துடன் போய் தான் தங்கியிருந்த விடுதியை அடைந்தான்.

அச்சிற்றரசன் அளித்த பதிலைக் கேட்ட அரசன் அச்சிற்றரசன் மானம் மிக்கவன் என்றும், தான் செய்தது முற்றும் தவறு என்றும் நன்றாக உணர்ந்து மிகவும் வெட்கம் அடைந்தான்.

| | |
|---|---|
| சிற்றரசன் | பரிவாரங்கள் |
| பேரரசன் | தலைநகர் |
| தல்யாத்திரை | ஆசனம் |
| வேந்தன் | குதூகலமாக |
| சால்வை | கௌரவமான |
| உற்சாகமாக | நடனக்கச்சேரி |
| புலப்பட்டு | விடுதி |
| லக்ஷியம் | மானம் |

**கேள்விகள்:**

1. கதையைச் சுருக்கமாகச் சொல்லு.

2. பேராசன் நல்லவனா? கெட்டவனா? ஏன்?

பயிற்சி:

1. கீழ்க்கண்ட சொற்களுக்கு ஈடான சொற்களைச் சொல்லு:

மன்னன், தேசம், நினைவு முட்டினான்.

2. ஜதைஜதையாகக்கொடுத்திருக்கும் கீழ்க்கண்ட சொற்களைக் கவனி. அவை பொருளில் வேறுபடுகின்றன அல்லவா? அவற்றைத் தனித்தனியே உபயோகித்துச் சொந்த வாக்கியங்கள் எழுது.

| | |
|---|---|
| வலி | வழி |
| விலை | விளை |
| அளித்த | அழித்த |

**இலக்கணம்:**

. ? ! இம்மூன்று நிறுத்துக் குறிகளும் இந்தப் பாடத்தில் வந்துள்ளன. இவற்றுள் ஒவ்வொன்றும் வந்துள்ள வாக்கியம் ஒன்றை வாசி. இவற்றுள் ஒவ்வொன்றும் வாக்கியத்தின் முடிவில் இடப்பட்டிருக்கிறது என்பதைக் கவனி. இவை மூன்றும் முற்றுக் குறிகள். . என்னும் அடையாளத்துக்கு முற்றுப்புள்ளி என்பது பெயர். கேள்வி வாக்கியத்தின் முடிவில் உள்ள ? என்னும் அடையாளத்துக்கு கேள்விக்குறி என்பது பெயர். ஆச்சரியத்தைக் கூறும் வாக்கியத்தின் முடிவில் உள்ள ! என்னும் அடையாளத்துக்கு ஆச்சரியக்குறி அல்லது வியப்புக்குறி என்பது பெயர்.

பயிற்சி: கீழ்க்கண்ட வாக்கியங்களின் முடிவில் ஏற்ற நிறுத்துக் குறிகளை இட்டு எழுது:

1. உன் பெயரென்ன

2. என் பெயர் சுந்தரம்

3. எவ்வளவு அழகான பெயர்

# 2. கொசுவின் வெற்றி




1. "அற்பப் பயலே, சிறு கொசுவே,
   யாரென் றென்னை எண்ணினை நீ?
சொற்பப் பயமும் இல்லாமல்
   சும்மா கிட்ட வருகின்றாய்.

2. எட்டிப் போ நீ; நில்லாதே;
   ஏறிட் டென்னைப் பாராதே.
வெட்டிப் பேச்சுப் பேசாமல்
   வீட்டைப் பார்த்து ஓடிப்போ"

3. என்றே சிங்கம் சீறலுமே
   'ஈ' என் றிளித்தது சிறு கொசுவும்;
"நன்றாய்ச் சொன்னாய், சிங்கம், நீ!
   நானா உனக்குப் பயப்படுவேன்?

4. கொம்பன் யானைக் குன்னைவிடக்
   கோடிமடங்கு பலமுண்டு.
வம்புப் பேச்சுப் பேசாதே!
   வலியவ னானல் சண்டைக்கு வா!

5. 'மாட்டேன்' என்ருல் ஓடிப்போய்
   வளையுள் எலிபோல் ஒளித்துக்கொள்.
'காட்டுக் கரசன் நா'னென்று
   கதைகள் பேசும் கழுதை நீ!

6. இந்தப் புல்லின் மீதிருந்து
   என்னைத் தள்ளி விடு, பார்ப்போம்!
எந்தக் கட்சி வலுவென்று
   இப்போதே நாம் பார்த்திடுவோம்!"

7. என்றே கூறிய சிறு கொசுவின்
   ஏச்சைத் தாங்க முடியாமல்
நன்ருய்ச் சிங்கம் ஊதுதலும்,
   நடுங்கின மரங்கள் புதர்களெலாம்,

8. புயலால் மோதுறும் கப்பல்போல்
   புல்லும் புதரும் ஆடிடினும்,
பயமே இல்லாச் சிறு கொசு தான்
   பற்றிய புல்லை விடவில்லை.



9. கோப மூண்ட அச்சிங்கம்
"கொசுவே, உன்னைத் தொலைத்திடுவேன்.
தீபச் சுடர்போல் விழியாலுன்
சிறகைப் பொசுக்கிக் கொன்றிடுவேன்"

10. என்று மீண்டும் ஊதியதும்
இலைகள் புயலில் பறந்தனவே.
"இன்றுன் உடம்பு நலமில்லையோ?
ஈரத் தரையில் படுத்தனையோ?

11. நெஞ்சில் சளிதான் கட்டினதோ?
நேரே ஊதத் திறமில்லையே!
பஞ்சு கூட உன்மூச்சில்
படிந்த இடம் விட்டகலாதே.

12. வீரன் சண்டை யிடும்வகையை
விரைவில் உணரச் செய்திடுவேன்.
தூர ஓடிப் போகாதே;
துணிவுண்டானுல் கிட்ட வா"

13. என்று வீர மொழிபேசி
எழுந்து கொசுவும் பாய்ந்ததுவே.
குன்றைக் கீறும் மின்னல்போல்
குதித்துப் போரைத் தொடங்கிற்றே.

14. கனலை உமிழும் கண்ணுள்ளே
கடிதில் பாய்ந்து குடைந்ததுவே
'அனலின் பொறியா இது?' என்று
அலறிச் சிங்கம் கதறிற்றே.

15. குகைபோல் குழிந்த காதினிலே
கொசுவும் நுழைந்தே ஆடிற்றே.
"பகைவா உன்னைக் கொன்றிடுவேன்.
பாராய்" என்று பாடிற்றே.

16. காதின் உள்ளே நுழைந்த கொசு
கடிக்கும் வலியைத் தாங்காமல்,
பாதி உயிரே போனதுபோல்
பதறி விழுந்த தச்சிங்கம்.

17. குடைந்து மூக்கைக் கடித்ததுவே,
குத்திக் குத்தித் துளைத்ததுவே.
உடைந்து போகும் உலகமென
ஊளையிட்ட தச்சிங்கம்.

18. காடும், செடியும், விலங்குகளும்,
கல்லும், மலையும், ஆறுகளும்
கேடு நமக்கு வந்ததென்று
கிடுகிடுத் தனவே கர்ச்சனையில்.

19. ஆனல் அந்தச் சிறு கொசுவோ
அச்சம் சிறிதும் இல்லாமல்
கானள் அரசன் மூக்கினுள்ளே
கடித்துக் கடித்துக் குடைந்ததுவே.

20. "ஐயோ,—நோவு பொறுக்குதிலே!
அப்பா மூக்கைத் துளைக்காதே!
ஐயோ, போதும்,—விட்டுவிடு!
அடடா!—மூக்குப் போயிற்றே!

21. அப்பா,—என்ன கஷ்டமிது?
அன்பா, கொசுவே, கடிக்காதே.
ஒப்பாய் உனக்கே ஒருவருமே
உலகில் இல்லே.—அப்பப்பா!"

—பெ. நா. அ.

எண்ணினே = எண்ணினுய்; சொற்பம் = கொஞ்சம்; எறிட்டு = நிமிர்ந்து; வெட்டி = வீண்; இளித்தது = சிரித்தது; கொம்பன் = கொம்பையுடைய; ஏச்சு = வசவு; மோதுறும் = மோதப்படும்; கனல் = நெருப்பு; அனல் = நெருப்பு; காளுள் [கான் + ஆள்] = காட்டை ஆளும்; பொறுக்குதிலே = பொறுக்க முடியவில்லை.

## கேள்விகள்:

1. உனக்குப் பிரியமான பாட்டுக்களை மனப்பாடம் செய்து, உரிய செயல்களோடு ஒப்பி.

2. கதையைச் சுருக்கமாகச் சொல்லு.

## பயிற்சி:

கீழுள்ள வாக்கியங்களில் சொற்கள் வரிசை மாறி அமைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றைச் சாதாரண முறையில் அமைத்து வாசி:

1. யார் என்று என்னை எண்ணினை நீ?
2. எட்டிப்போ நீ.
3. 'ஈ' என்று இளித்தது சிறு கொசுவும்.
4. நடுங்கின மரங்கள் புதர்களெலாம்.
5. பதறி விழுந்தது அச் சிங்கம்.
6. ஒப்பாய் உனக்கே ஒருவருமே உலகில் இல்லை.

## இலக்கணம்:

" " இவ்வகைக் குறிகளுக்கு மேற்கோள்-குறிகள் என்பது பெயர். மேற்கோள் குறிகள் வந்துள்ள சில வாக்கியங்களை இந்தப் பாடத்திலிருந்து வாசி. ஒருவன் சொல்லும் அல்லது நினைக்கும் சொற்களை அவன் சொல்வது அல்லது நினைப்பது போல் எழுதும்போது இக்குறிகளை உபயோகித்திருப்பதைக் கவனி.

# 3. சிங்கம்



சிங்கம் மிகவும் கம்பீரமான தோற்றத்தை உடைய பிராணி. அது கர்ச்சிக்கும்போது இடி முழங்குவது போல் ஓசை கேட்கும். மக்கள் அதை மிருகராஜன் என்று கொண்டாடுகிருர்கள். சிங்கம் மிகவும் பலமுள்ள மிருகம். அது தன்னுடைய முன்காலால் ஓங்கி ஓர் அடி அடித்தால், எருதின் தலே நசுங்கிப்போகும்; குதிரையின் முதுகு முறிந்துவிடும். அது தன் வாயால் மாட்டைக் கௌவித் தூக்கிக்கொண்டு போவதுண்டு. காட்டில் வாழும் பல மிருகங்களேக் காட்டிலும் அது வேகமாய் ஓட வல்லது. அது ஒரு பாய்ச்சலில் முப்பது அடி வரையில் தாண்டும்.

நன்ருய் வளர்ந்த சிங்கம் நாலடி உயரம் இருக்கும். மூக்கின் நுனியிலிருந்து வால் குச்சின் நுனி வரையில் அளந்து பார்த்தால் சிங்கத்தின் நீளம் ஒன்பது அடி இருக்கும்.

இவ்வளவு பலமுள்ள பிராணியின் வாயில் அகப் பட்டால் எப்படி இருக்கும்? "இக்கேள்விக்கு யாரால் பதில் சொல்ல முடியும்? சிங்கத்தின் வாயில் அகப்பட்ட வன் பிழைத்து வருவானு? வந்தால் அல்லவோ சொல்லு வதற்கு முடியும்!" என்று நினைப்போம் அல்லவா? ஆயி னும் சிங்கத்தின் வாயில் அகப்பட்ட ஒருவர் பிழைத் துத் திரும்பி வந்திருக்கிருர். சிங்கம் தன்னைக் கடித்த போது எப்படி இருந்தது என்று அவர் சொல்லியிருக் கிருர். அவர் யார் தெரியுமா? அவர்தான் டாக்டர் லிவிங்ஸ்ட்டன் என்னும் பாதிரி. ஆப்பிரிக்காவில் பிர யாணம் செய்து, பல இடங்களைப் புதிதாய்க் கண்டு பிடித்தவர். அவரைச் சிங்கம் கடித்தபோது, அவருக்கு நோவே தோன்றவில்லையாம். தம்முடைய உடலில் எந் தப் பாகத்தைச் சிங்கம் கடித்துத் தின்னுமோ என்ற ஒரே எண்ணம்தான் அவருக்கு அப்போது தோன்றிற்ரும்.

காட்டில் வாழும் மற்றக் கொடிய மிருகங்களைப் போலன்றிச் சிங்கம் சிநேகத்தைப் பாராட்டும். ஆண் சிங்கமானது காட்டில் வேட்டையாடிப் பெண் சிங்கத் துக்கு உணவைக் கொண்டுவந்து கொடுக்கும்; பெண் சிங்கத்துக்குத் தீங்கு வராமல் காக்கும்; தன்னை வளர்க் கும் மனிதனிடமும் மிகவும் நட்புப் பாராட்டும். ஆனல் இந்தக் குணத்தை நம்பி அதோடு நெருங்கிப் பழக லாகாது.

சர்க்கஸ் கூடாரத்திலே சிங்க ஆட்டம் நடந்து கொண்டிருந்தது. ஆறு சிங்கங்களின் நடுவே இருந்து கொண்டு சர்க்கஸ்காரன் விளையாட்டுக் காட்டினன். புதிதாய் வந்த சிங்கம் ஒன்று, அவனேடு அதிகம் பழகாதது, திடீரென்று அவன்மேல் பாய்ந்து, அவ தாக்கிற்று. அப்போது பழகின சிங்கங்களில் சில



வும் அதோடு சேர்ந்துகொண்டு அவனை எதிர்த்தன. அந்தச் சமயத்தில் அங்குள்ள சிங்கங்களிலெல்லாம் பெரிய சிங்கம்,—அவனோடு நன்றாய்ப் பழகினது,—வீட்டு நாய் துணைக்கு வருவதுபோல் அவனது துணைக்கு வந்து, மற்றச் சிங்கங்களைத் தாக்கிற்று. அது மற்றச் சிங்கங்களால் கடியுண்டபோதிலும், விடாமல் அவற்றோடு சண்டைபோடவே, சர்க்கஸ்காரன் பிழைத்தான்.

இங்கிலாந்தின் தலைநகராகிய லண்டனிலே ஒரு மிருகக் காட்சிச் சாலை உள்ளது. அங்கே சில சிங்கங்களும் இருந்தன. அவற்றைப் பார்ப்பதற்குக் காசு கொடுக்க வேண்டும். காசு கொடுக்க இயலாதவர்கள் அந்த மிருகங்களுக்கு ஆகாரமாக நாய், பூனை போன்ற பிராணி ஏதாவது ஒன்றைக் கொடுத்துவிட்டு உள்ளே போய்ப் பார்க்கலாம். அப்படி வந்த ஒருவன் அழகான கறுப்பு நாய்க் குட்டி ஒன்றைக் கொண்டுவந்தான். சிங்கக் கூட்டில் அதை வீசி எறிந்தான். சிங்கத்தைக் கண்டதும் அந்த

நாய்க்குட்டி நடுங்கி ஒடுங்கிப்போய், சிங்கத்தைப் பார்த்த வண்ணமாகத் தன் முன்கால் இரண்டையும் தூக்கிக் கொண்டு கெஞ்சிற்று. அதைப் பார்த்தால் உயிர்ப்பிச்சை கேட்பதுபோல் இருந்தது.

சிங்கம் அதைக் கொல்லவில்லை. அதன் அருகில் வந்து, தன் காலால் அதை மிகவும் மெதுவாகத் தட்டிக் கொடுத்தது; அதை மோந்து பார்த்தது; அதை 'விளை யாட வா' என்று அழைப்பதுபோலிருந்தது.

சிறிது நேரத்தில், வழக்கம்போல், சிங்கத்தின் உணவைக் கூட்டுக்குள் எறிந்தார்கள். சிங்கம் அந்த உணவின் அருகே செல்லாமல், ஒதுங்கிச் சென்றது. அதன் கண்கள் நாய்க்குட்டியைப் பார்த்து, 'நீ முதலில் சாப்பிடு' என்று சொல்லுவனபோல் தோன்றின. அன்றுமுதல் சிங்கத்துக்கும் நாய்க்குட்டிக்கும் மிகவும் நெருங்கிய நட்பு உண்டாகிவிட்டது. இரண்டும் ஒன் ருகவே கூட்டில் வாழ்ந்தன.

இது நடந்து ஒரு வருஷத்துக்குப் பிறகு, அந்த நாய்க்குட்டி நோயுற்று இறந்தது. அதைக் கண்டதும் சிங்கம் அது உறங்குகிறது என்றே நினைத்தது. அதை மெல்லத் தட்டி எழுப்பப் பார்த்தது. எவ்வளவு முயன் றும் நாய்க்குட்டி எழுந்திருந்து விளையாடாததைக் கண்டு, சிங்கம் மிகவும் வருந்தியதுபோல் தோன்றிற்று. தன் மனத்தின் வேதனையால் சிங்கம் ஓரிடத்தில் நில்லா மல் கூட்டில் இங்குமங்கும் உலாவிற்று; நாய்க்குட்டியின் அருகில் வந்து அதை மெல்ல மோந்து பார்த்தது; அது அசையாது கிடக்கக்கண்டு, தன் தலையை நிமிர்த் திக் காது செவிடுபடக் கதறிக் கர்ச்சித்தது. சிங்கத்தின் பாதுகாப்பாளன் அந்த நாய்க்குட்டியின் உடலைக் கூட்டி லிருந்து அப்புறப்படுத்த முயன்ருன். சிங்கம் அதற்கு

இடங்கொடுக்கவில்லை. சிலகாலம் ஆகாரமேயின்றிச் சிங்கம் ஏங்கிக் கிடந்தது. பலவகை உணவுகளை அதன் முன் வைத்துப் பார்த்தார்கள். சிங்கம் ஒன்றையும் தொடவில்லை. இப்படிச் சிலகாலம் ஏக்கமுற்றுப் பட்டினி கிடந்தபிறகு, அதனால் நடக்கக்கூட முடியவில்லை. அப்போதும் தன் அருமைத் தோழனை விட்டுப் பிரியாமல் அதன் அருகே படுத்திருந்தது. தன் முன்கால்களை நீட்டி, அந்த நாய்க்குட்டியின் உடலைத் தன் மார்போடு அணைத்துக்கொண்டது. அதன்மீது தன் தலையை மெதுவாகச் சாய்த்த வண்ணமாகப் படுத்துக் கிடந்து, சிலநாளில் உயிர் துறந்தது.

பிராணிகளுக்கெல்லாம் அரசனாக மதிக்கப்படும் சிங்கத்தின் பெயரை மனிதர்கள் தங்களுக்குரிய சிறந்த பட்டமாக வைத்துக்கொண்டு பாராட்டுகிறார்கள். ஷேர், ஹைதர், ஸிங், ஸிம்ஹன், சிங்கன் என்றெல்லாம் பட்டம் வைத்துக்கொண்ட வீரர்களும், அரசர்களும் எத்தனை பேர்! ஆனால் சிங்கப் பெயர் பூண்ட எந்த நாட்டு அரசனும் பிறப்பதற்கு வெகு காலத்துக்கு முன்னரே காட்டுச் சிங்கமானது சுயேச்சையாய்த் திரிந்து, தன் அதிகாரத்தைச் செலுத்தி வந்தது.

| | | |
|---|---|---|
| கம்பீரமான | ஸிங் | பாதுகாப்பாளன் |
| லிவிங்ஸ்ட்டன் | சுயேச்சை | ஹைதர் |
| உயிர்ப்பிச்சை | மிருகராஜன் | ஸிம்ஹன் |
| ஷேர் | மிருகக்காட்சிச்சாலை | அதிகாரம் |

**கேள்விகள்:**

1. சிங்கத்துக்கு ஏன் மிருகராஜன் என்று பெயர்?
2. லிவிங்ஸ்ட்டனைப்பற்றி இந்தப் பாடத்தில் சொல்லியிருப்பதைச் சுருக்கமாய்ச் சொல்லு.
3. சிங்கமும் நாய்க்குட்டியும் என்ற கதையைச் சுருக்கமாகச் சொல்லு.

4. சிங்கம் சிநேகம் கொள்ளக்கூடிய மிருகம் என்பதைக் காட்ட வேறொரு கதை சொல்லு.

5. அண்டிராகிளீஸும் சிங்கமும் என்னும் கதை உனக்குத் தெரியுமா?

## இலக்கணம்:

, இந்த நிறுத்தல் குறிக்குக் கால் புள்ளி என்பது பெயர். இந்தக் குறி இடப்பட்டுள்ள சில வாக்கியங்களை இந்தப் பாடத்திலிருந்து வாசி. படிக்கும்போது சற்றே நிறுத்திப் படிக்கும் இடங்களிலெல்லாம் இந்தக் குறி இடப்பட்டிருப்பதைக் கவனி.

'ஷேர், ஹைதர், ஸிங், ஸிம்ஹன், சிங்கன் என்றெல்லாம் பட்டம் வைத்துக்கொண்ட வீரர்களும், அரசர்களும் எத்தனை பேர்!' என்னும் வாக்கியத்தில் ஷேர் முதலிய ஒவ்வொரு பெயர்ச்சொல்லின் முடிவிலும் நாம் சற்றே நிறுத்திப் படிக்கிறோம் அல்லவா? ஆதலால் அந்த இடங்களிலெல்லாம் கால் புள்ளியை இடுகிறோம்.

'மரத்தை வெட்டி, அறுத்து, ஒடித்து, எடுத்துக்கொண்டு போனார்கள்.' இந்த வாக்கியத்தில் வெட்டி முதலிய வினைச் சொற்களின் முடிவிலும் சற்றே நிறுத்திப் படிக்கிறோம் அல்லவா? ஆகையால் இந்த இடங்களிலும் கால் புள்ளி இடப்பட்டிருக்கிறது. இவ்விதமே ஒவ்வொரு வாக்கியத்திலும் பல பெயர்ச்சொற்களோ வினைச்சொற்களோ தொடர்ந்து அடுக்காய் வரும்போது, அவற்றின் இடையே, கால் புள்ளி இட வேண்டும்.

; இந்த நிறுத்துக் குறிக்கு அரைப்புள்ளி என்பது பெயர். மிகவும் நெருங்கிய சம்பந்தமுள்ள வாக்கியங்கள் ஒன்றாக அடுத்து வரும்போது அவற்றுக்கு இடையே முற்றுப்புள்ளி வைக்காமல் இந்தக் குறியை இடுகிறார்கள். இந்தக் குறி இடப்பட்ட சில வாக்கியங்களை இந்தப் பாடத்திலிருந்து வாசி. கால் புள்ளி இட்ட இடத்தில் நிறுத்திப் படிப்பதை விட, இந்தப் புள்ளி இட்ட இடத்தில் சற்றே அதிக நேரம் நிறுத்திப் படிக்கவேண்டும். முற்றுப் புள்ளி இட்ட இடத்தில் இதைக்காட்டிலும் அதிக நேரம் நிறுத்திப் படிக்கவேண்டும்.

# 4. அப்பியாசம்

கீழ்க்கண்ட ஆறு படங்களும் ஒரு கதையை விளக்குகின்றன. அவற்றைக் கவனமாகவும் வரிசையாகவும் பார். கதையைச் சுருக்கமாகச் சொல்.

## உப்பு மூட்டையும் பஞ்சு மூட்டையும்




1



2




3




4



5




6

# 5. கதை எழுதுதல்

## உப்பு மூட்டையும் பஞ்சு மூட்டையும்

ஒரு கிராமத்தில் கண்ணன் என்று ஒரு கடைக்காரன் இருந்தான். அவன் ஆற்றைக் கடந்து பெரிய கடைக்குப் போனான். கடையில் இரண்டு கூடை உப்பு வாங்கினான். அந்தக் கூடைகளைத் தன் கழுதையின் மேல் ஏற்றினான். கழுதை நேரே நடக்காமல் சண்டித்தனம் பண்ணிற்று. அதை இழுத்துக்கொண்டு ஆற்றின் கரைக்குக் கண்ணன் வந்து சேர்ந்தான்......

மேற்கண்ட ஆறு படங்களையும் பார்த்து இந்தக் கதையை எழுதி முடி.

# 6. ஓட்டுச்சல்லி




நாகப்பட்டினத்திலே கதிர்வேல் என்ற பேருள்ள பெரிய வியாபாரி ஒருவன் இருந்தான். அவன் வர்த்தகம் செய்து ஏராளமான பணம் சம்பாதித்தான். அவன் சிறந்த அறிவாளியாயும் இருந்தான்.

அவனுக்குக் காயாரோகணம் என்ற பெயருள்ள ஒரு மகன் இருந்தான். அவனைக் கதிர்வேல் மிகவும் செல்வமாக வளர்த்து வந்தான். செல்வத்திலே பிறந்து செல்வமாக வாழ்ந்துவந்த அந்த மகனோடு பல இளைஞர்கள் சிநேகமாக இருந்தார்கள். அவர்களுள் ஒருவனை குமாரன் என்பவனையே காயாரோகணம் தனக்கு மிகவும் நெருங்கிய நண்பனாகப் பாராட்டி வந்தான்; எல்லா விஷயங்களிலும் அவனை முழுவதும் நம்பிவந்தான்.

ஆனால் குமாரன் நற்குணம் உடையவன் அல்லன். காயாரோகணம் தன்மேல் முழு நம்பிக்கை வைத்திருப் பதைக் கண்டு, அவனைப் பலமுறை வஞ்சித்துப் பணம் பறித்துக்கொண்டான். கதிர்வேல் அதைக் குறித்துப் பலமுறை குறிப்பாய்ச் சொல்லியும் குமாரனுடைய வஞ் சனையைக் காயாரோகணம் உணரவில்லை.

ஒரு சமயம் கதிர்வேலும் காயாரோகணமும் கப்ப லேறி ரங்கூனுக்குச் செல்லவேண்டி யிருந்தது. அப் பொழுது கதிர்வேல் காயாரோகணத்தைப் பார்த்து, "நம்முடைய பணப்பெட்டியை நாம் அயல் நாட்டுக்குக் கொண்டுபோகலாகாது; ஆதலால் அதை இங்கே வைத்துவிட்டுப் போவதுதான் நலம். அதை யாரிடம் நம்பிக்கையாகக் கொடுத்துவைக்கலாம்?" என்று கேட் டான்.

"ஏன்? வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கு அலைவதுண்டா? என்னுடைய நண்பன் குமாரன் இருக் கிறானே. அவனைப்போல யோக்கியன் இந்த ஊரில் எவன் இருக்கிறான்?" என்றான் மகன்.

"அப்படியானால், நீ சொன்னபடி, அவனிடம் வைத்துவிட்டுப் போவோம்" என்றான் வியாபாரி.

ஒரு பெரிய மரப்பெட்டியை வியாபாரி தன் னுடைய மகனிடம் கொடுத்தான். அதற்கு மூன்று பெரிய பூட்டுக்கள் போட்டுப் பூட்டியிருந்தது. "இந்தப் பணப்பெட்டியை உன்னுடைய அருமைச் சிநேகித னிடம் கொடுத்து, ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள் ளச் சொல்; நாம் ரங்கூனிலிருந்து திரும்பி வந்ததும் இதை வாங்கிக்கொள்ளுவோம்" என்று வியாபாரி தன் மகனிடம் சொன்னான்.

காயாரோகணம் அதைத் தன் சிநேகிதனிடம் கொடுத்துவிட்டு வந்ததும், அவ்விருவரும் ரங்கூனுக்குப் போனார்கள்; தாங்கள் செய்ய எண்ணிய காரியத்தை முடித்துக்கொண்டு, மூன்று மாதத்தில் திரும்பினார்கள்.

ஊர் திரும்பியதும், அந்த வியாபாரி தன் மகனைப் பார்த்து, "உன் சிநேகிதனிடம் கொடுத்த பணப்பெட்டியை வாங்கிக்கொண்டுவா" என்று அனுப்ப, மகனும் புறப்பட்டுப் போய்ச் சிறிது நேரத்துக்கெல்லாம் வெகு வேகமாய்த் திரும்பி வந்தான். வந்ததும், தன் தகப்பனைப் பார்த்து மிகவும் ஆத்திரத்துடன் "நீ என் சிநேகிதனை அவமானப்படுத்திவிட்டாய். நீ அவனிடம்



ஒப்புவித்தது பணப்பெட்டி அன்றும். பெட்டி நிறைய ஓட்டுச்சல்லியை நிரப்பி அவனைப் பத்திரமாகப் பார்த்துக்கொள்ளச் சொன்னாயாம். இதை என் சிநேகிதன் என்னிடம் சொல்லி வருத்தப்பட்டான். இப்படியா ஒருவனை அவமானப்படுத்துகிறது?" என்று மிகவும் கோபமாகச் சொன்னான்.

அதைக்கேட்ட வியாபாரி, சிரித்துக்கொண்டு, "நான் கொடுத்த பெட்டிக்குள் வைத்திருந்தது பணம் அன்று, ஓட்டுச்சல்லிதான் என்பது உன்னுடைய யோக்கியமான சிநேகிதனுக்கு எப்படித் தெரிந்தது? நான் பெட்டிக்கு மூன்று பூட்டுப்போட்டுப் பூட்டியிருந்தேனே. அவன் பூட்டை உடைத்துப் பார்த்திருக்கிறன் என்பதில் இனி மேல் ஏதாவது சந்தேகம் உண்டா? அவன் நம்பத்தகாதவன் என்பதை இப்பொழுதாவது தெரிந்துகொண்டாயா?" என்றான்.

இதைக்கேட்ட மகன் வெட்கித் தலைகுனிந்து நின்றான்.

| | |
|---|---|
| வர்த்தகம் | வஞ்சித்து |
| ஒப்புவித்து | யோக்கியமான |

**கேள்விகள்:**

1. காயாரோகணத்தின் நண்பன் நல்லவனா? கெட்டவனா? ஏன்?

2. பெட்டியில் ஓட்டுச்சல்லி இருந்தது என்பது குமாரனுக்கு எப்படித் தெரிந்தது?

3. காயாரோகணம் கடைசியில் வெட்கித் தலைகுனிந்து நின்றானே, ஏன்?

4. காயாரோகணம் அதற்குப் பிறகு குமாரனோடு சிநேகமாய் இருந்திருப்பானா? நீ என்ன நினைக்கிறாய்?

**இலக்கணம்:**

I. பெயர்ச்சொற்களைப் பொருட்பெயர், இடப்பெயர், காலப்பெயர், சினைப்பெயர், பண்புப்பெயர், தொழிற்பெயர் என்று ஆறு வகைகளாகப் பிரிக்கலாம்.

1. பொருளைக் குறிக்கும் பெயர் பொருட்பெயர்.

2. இடத்தைக் குறிக்கும் பெயர் இடப்பெயர்.

3. காலத்தைக் குறிக்கும் பெயர் காலப்பெயர்.
4. உறுப்பைக் குறிக்கும் பெயர் சினைப்பெயர்.
5. குணத்தைக் குறிக்கும் பெயர் பண்புப்பெயர்.
6. தொழிலைக் குறிக்கும் பெயர் தொழிற்பெயர்.

பயிற்சி: கீழ்க்கண்டபடி அட்டவணை ஒன்றை வரைந்து கொண்டு, கீழுள்ள சொற்களை அதில் பொருத்தமாக எழுதவும்:

| பொருள் | இடம் | காலம் | சினை | பண்பு | தொழில் |
|---|---|---|---|---|---|
| | | | | | |

பூனை, தெரு, புளிப்பு, பகல், சித்திரை, தலை, காய், நாற்காலி, சிவப்பு, தூக்கம், தஞ்சாவூர், படிப்பு.

பயிற்சி: இந்தப் பாடத்திலிருந்து பத்துப் பெயர்ச்சொற்களைப் பொறுக்கி எழுதவும். அவற்றுள் ஒவ்வொன்றும் இன்ன வகையைச் சேர்ந்தது என்று குறிப்பிடவும்.

II. எண் ஒருமை பன்மை என இருவகைப்படும். ஒரு பொருளைக் குறிக்கும் சொற்கள் ஒருமை; பல பொருள்களைக் குறிக்கும் சொற்கள் பன்மை.

பயிற்சி: கீழ்க்கண்ட சொற்களில் ஒருமைச் சொற்கள் எவை? பன்மைச்சொற்கள் எவை? இவற்றுள் ஒவ்வொன்றுக்கும் மறு எண்ணைச் சேர்ந்த சொல்லை எழுதவும்.

மரம், வீடுகள், மனிதர், குதிரை, மனைவியர், குருமார், கற்கள், அரசன், நண்பன், பூட்டு.

# 7. எறும்புகள்

(முதற் பாகம்)

கீழ்த்தரப் பிராணிகள் எல்லாவற்றிலும் எறும்புகளையே மிகவும் விந்தையான பிராணிகள் என்று சொல்ல





லாம். அவை அற்பப் பிராணிகளேயாயினும் அவை மிக்க அறிவுள்ளவை, மிக்க சுறுசுறுப்புள்ளவை. ஆதலால் அவற்றை மக்கள் வெகு காலமாகப் பாராட்டி வந்திருக்கிறார்கள். "அடே சோம்பேறி! எறும்பைப் பார். அது செய்வதைக் கவனி. அது இருப்பதுபோல் நீயும் சுறுசுறுப்பாக இரு. உன் அறிவு நாளுக்குநாள் வளரும்" என்பது பழங்கால அறிவுரை.

எறும்புகளிலே ஆயிரக்கணக்கான வகைகள் இருக்கின்றன. ஒவ்வொரு கண்டத்திலுமுள்ள பற்பல பகுதிகளிலும் நூற்றுக்கணக்கான வகைகளைக் காணலாம். அவற்றின் நிறத்தில் எத்தனை பேதங்கள்! சில மஞ்சள் நிறமுள்ளவையாயும், சில பழுப்பு நிறமுள்ளவையாயும், சில சிவப்பு நிறமுள்ளவையாயும், சில கறுப்பு நிறமுள்ளவையாயும் காணப்படுகின்றன. தடவிப் பார்க்கும் உறுப்புக்கள் எறும்புகளுக்கு உண்டு. இவற்றைத் தொடுவிகள் என்று சொல்லலாம். நம்முடைய முழங்கை வளைந்திருப்பதுபோல் இவை வளைந்திருக்கும். தங்களுக்கு எதிர்ப்படும் ஒவ்வொரு பொருளையும் இந்தத் தொடிகளாலே இவை சோதித்துப் பார்க்கின்றன. இவற்றின்

மூலமாகவே எறும்புகள் ஒன்றுக்கொன்று தம் தம் கருத்துக்களை வெளியிட்டும் அவற்றை உணர்ந்தும் வருகின்றன என்று தோன்றுகிறது.

எறும்புகள் பலவகையான பொருள்களையும் உண்டு வாழும் பிராணிகள். ஏதாவது சிறு ஜந்து ஒன்று செத்துக் கிடந்தால், அதை எறும்புகள் கரகரவென்று இழுத்துத் தம்முடைய பொந்துக்குக் கொண்டுபோகும். பல வகைப் பொருள்களில் இனிப்புப் பொருள்களின்மீது எறும்புகளுக்கு விருப்பம் அதிகம். ஒரு வீட்டிலே மேஜையின்மீது கிண்ணத்திலே சர்க்கரை வைத்திருந்தார்கள். எறும்புகள் வரலாகாதென்று மேஜையின் கால்களைச் சிறிய தண்ணீர்த் தொட்டிகளில் வைத்திருந்தார்கள். ஆனபோதிலும், சிறிது நேரத்தில் சர்க்கரைக் கிண்ணத்தில் எறும்புகள் மொய்த்திருக்கக் கண்டார்கள். எறும்புகள் எப்படி வந்தன என்று பார்த்தார்கள். எறும்புகள் சுவரின் வழியாக மேலேறி, மேஜைக்கு நேராக வந்து, அங்கிருந்து மேஜையின்மேல் குதித்து விழுந்து கொண்டிருக்கக் கண்டார்கள்!

பெரும்பான்மையான எறும்புகள் கூடுகளில் வாழ்கின்றன. சிலவகை எறும்புகள் பெரிய கல் ஏதாவது கிடந்தால், அதன் அடியில் குழி தோண்டி அங்கு வாழ்கின்றன. வேறு சிலவகை எறும்புகள் பட்டுப்போன மரங்களைத் துளைத்து, அவற்றில் வாழ்கின்றன. இன்னும் சிலவகை எறும்புகள் மரம் செடி முதலியவற்றின் இலைகளை ஒருவகைப் பிசினல் ஒட்டிக் கூடுபோலாக்கி, அதைத் தம் இருப்பிடமாகக் கொள்கின்றன. மற்றும் சில எறும்பு வகைகள் புற்றுக்களைக் கட்டுகின்றன. எறும்புப் புற்றுக்களில் சில ஓர் ஆள் உயரத்துக்குமேல் இருக்கும். இப்புற்றுக்களில் எத்தனையோ அறைகளும், வரிசை

வரிசையான தாழ்வாரங்களும் இருக்கும். இவற்றை மிக வும் விந்தையான 'எறும்பு மாளிகைகள்' என்று சொல்ல லாம்.

எறும்புகள் ஒன்றுக்கொன்று உதவிசெய்யும் சுபா வம் உள்ளவை. ஒரு சமயம் மண் சுவர் ஒன்றின் ஓர மாக எறும்புகள் போய்க்கொண்டிருந்தபொழுது, சுவரி லிருந்து சிறிது மண் உதிர்ந்து ஓர் எறும்பின்மேல் விழுந்தது. அடியில் அகப்பட்டுக்கொண்டு தவித்த எறும்பின் துணைக்கு மூன்று எறும்புகள் ஓடோடியும் வந்தன. ஒன்று அதை மெல்லப் பிடித்து வெளியே இழுத்தது; வேறிரண்டு அதன் தலையில் விழுந்த மண் ணைப் பொறுக்கிப் பொறுக்கி அப்புறம் எறிந்தன. பிறகு எல்லாமாக அந்த எறும்பைத் தடவிக் கொடுத்தன. அதன் பிறகு நாலுமாக ஒன்ருய் முன்போல் செல்லத் தொடங்கின. களைப்பு மேலீட்டால் ஏதாவதோர் எறும் புக்கு நடக்க முடியாமல்போனுல் மற்ருென்று அதைத் தன் முதுகின்மேல் ஏற்றிச் செல்லும். எறும்புகள் விளையாடுவதும் உண்டு. பூனைக்குட்டிகள் ஒன்ருே டொன்று விளையாடுவதுபோல் எறும்புகளும் ஒன்ருே டொன்று கைகோத்து விளையாடுகின்றன; துள்ளிக் குதிக்கின்றன; பலவகையாய் நடனமாடுகின்றன.

| | |
|---|---|
| கீழ்த்தர | விந்தையான |
| அறிவுரை | தொடுவி |
| தாவரப்பொருள் | பெரும்பான்மை |
| புற்றுக்கள் | தாழ்வாரம் |
| மேலீடு | ஓடோடியும் |

**கேள்விகள்:**

1. தொடுவிகள் எறும்புகளுக்கு எவ்வாறு பயன்படுகின் றன?

2. பலவகை எறும்புக் கூடுகளைப்பற்றி உனக்கு என்ன தெரியும்?

# 8. எறும்புகள்

## (இரண்டாம் பாகம்)

சில எறும்புகளை இடையர்களுக்கு ஒப்பிடலாம்; ஏனென்றால் இடையர்கள் பசுக்களை வளர்த்து வருவது போல் அவை சில சிறு பிராணிகளை வளர்த்து வருகின்றன. இச்சிறு பிராணிகள் சில செடிகளில் தங்கி, அவற்றின் சாற்றை உண்டு வாழ்பவை. இவற்றின் உடலிலிருந்து இனிப்பான திரவத் துளிகள் கசியும். அத்துளிகளை எறும்புகள் மிகவும் ஆவலோடு பருகுவதைக் காணலாம். எறும்புகளின் 'பசுக்கள்' என்று இவற்றைச் சொல்லலாம் அல்லவா? ரோஜாச் செடிகளின் இலைகளில் இவை தங்கியிருப்பதைக் காணலாம். தாங்கள் வளர்க்கும் இப்பசுக்களை எறும்புகள் மிகவும் ஜாக்கிரதையாகப் பாதுகாத்து வருகின்றன. அவைகளுக்கு வேண்டிய நல்ல உணவு எளிதாகக் கிடைக்கக்கூடிய இடங்களில் அவற்றுக்குக் கூடுகளைக் கட்டிக் கொடுக்கின்றன. தாய் தன் குழந்தைகளை வளர்ப்பதுபோலவும், குடியான



வன் தன்னுடைய கால்நடைகளை வளர்ப்பதுபோலவும் எறும்புகள் இப்பசுக்களைப் பேணி வளர்க்கின்றன.

வெவ்வேறு வகையான எறும்புகளுக்கிடையே போர்கள் நிகழ்வதுண்டு. அப்போதெல்லாம் பெரிய உயிர்ச் சேதம் ஏற்படும். எறும்புக் கூடுகளைச் சுற்றிக் காவற்காரர்கள் உண்டு. பகை எறும்புகள் படையெடுத்து வருகின்றன என்பதை உணர்ந்தவுடன், அவை மிக வேகமாக எறும்புக் கூட்டுக்குள்ளே சென்று, தாம் சந்திக்கும் ஒவ்வோர் எறும்பையும் தம்முடைய தொடிக ளால் தொட்டுக்கொண்டே போகும். "அபாயம் வந்து விட்டது, யுத்தத்துக்குப் புறப்படுங்கள்" என்ற செய்தி யைப் பரப்பும் வழி இதுதான் என்று தோன்றுகிறது. ஏனெனில் இவ்வாறு அவை செய்து சிறிது நேரத்திற் குள்ளே, ஆயிரக்கணக்கான எறும்புகள் கூட்டினுள்ளே யிருந்து போருக்கு ஆயத்தமாய் வெளியே வருகின்றன. எறும்புகள் வீராவேசத்தோடு சண்டையிடும். தம்மைக் கால் வேறு கை வேருகப் பிய்த்தபோதிலும் அவை தாம் பிடித்த பிடியை விடுவதில்லை. பசுக்களின் நிமித்தமும் அடிமைகளின் நிமித்தமும் இவ்வகையான போர்கள் நிகழ்வதுண்டு.

எறும்புகளிலும் அடிமைகள் உண்டு. ஒரு வகை யைச் சேர்ந்த எறும்புகள் மற்றொரு வகையைச் சேர்ந்த எறும்புகளின் கூட்டைத் தாக்கும். அங்குள்ள எறும்பு களைப் போரில் முறியடித்து, கூட்டிலுள்ள எறும்பு முட்டைகளைக் கவர்ந்துகொண்டு மீளும். அம்முட்டை களிலிருந்து பொரிக்கும் எறும்புகளை அடிமைத்தொழில் புரியப் பழக்கும். இவ்வாறு கவரப்பட்ட அடிமை எறும்புகளும், கவர்ந்த எசமான் எறும்புகளும் அன்னி யோன்னியமாய் வாழ்கின்றன. தங்களுடைய அடிமை

களைக் காப்பாற்றும் பொருட்டு, எசமான் எறும்புகள் சண்டையிடவும் உயிரைத் துறக்கவும்கூடச் சித்தமா யிருக்கின்றன.

இவ்வாறு அடிமைகளைப் பிடித்து வேலை வாங்கும் எறும்புகளுக்கு வேண்டிய காரியங்கள் அனைத்தையும் அடிமை எறும்புகளே செய்து வருகின்றன. ஆதலால் இவற்றுக்கு அடிமைகள் இல்லாவிட்டால் ஒரு காரியமும் நடவாது. கூடு கட்டுதல், சிறு எறும்புகளை வளர்த்தல், உணவு தேடித் திரட்டல், உணவு உண்பித்தல் முதலிய எல்லாக் காரியங்களையும் அடிமை எறும்புகளே செய்து வருகின்றன. அடிமை எறும்புகள் உழைக்காமல் போனால், எசமான் எறும்புகள் தங்கள் உயிரைக் காத்துக்கொள்ள வகையறியாமல் மாளவேண்டியதுதான்.

'ஒட்டி எறும்பு'களுள் ஒன்றைப் படத்தில் காட்டி யிருக்கிறது. அவற்றுக்குக் கண் தெரியாது; அவை முழுக் குருடு. அவை கடித்தால் பழுக்கக் காய்ச்சிய ஊசியைச் செருகியது போலிருக்கும். அவற்றுக்குக் கூடுகள் ஒன்றும் கிடையா. ஆதலால் அவை இடம் இடமாய்த்திரியும் இயல்புள்ளவை. அவற்றின்



படையை ஓரிடத்தில் கண்டதும், அங்குள்ள ஜனங்கள் அவ்விடத்தைவிட்டு ஓடிவிடுவார்கள்; சிலகாலம் கழித்துத்தான் திரும்புவார்கள். அவர்கள் திரும்பி வந்த பின் பார்த்தால், அவ்விடத்திலே உள்ள கெட்ட ஜந்துக்களுள் ஒன்றுகூடப் பாக்கியிராமல் எறும்புகள் தின்றிருக்கக் காணுவார்கள்.

| | | |
|---|---|---|
| சாறு | அடிமை | தொடி |
| கால்நடைகள் | அன்னியோன்னியமாய் | ஆயத்தமாய் |
| பேணி | உண்பித்தல் | நிமித்தம் |
| சந்திக்கும் | திரவத்துளி | முறியடித்து |
| அபாயம் | குடியானவன் | எசமான் |
| வீராவேசம் | உயிர்ச்சேதம் | மாள |

## கேள்விகள்:

1. எறும்புப் பசுக்கள் எறும்புகளுக்கு எவ்வாறு உதவுகின்றன?
2. அடிமை எறும்புகள் என்றால் என்ன?
3. ஒட்டி எறும்புகளைக் கண்டு ஜனங்கள் ஏன் ஓடுகிறார்கள்?

## இலக்கணம்:

பெயர்ச்சொற்கள் உயர்திணையைச் சேர்ந்தவையாகவாவது, அஃறிணையைச் சேர்ந்தவையாகவாவது இருக்கும். பகுத்தறியும் அறிவுள்ள உயிர்களைக் குறிக்கும் சொற்கள் உயர்திணைச் சொற்கள். மற்றைய எல்லாச் சொற்களும் அஃறிணைச் சொற்கள்.

பயிற்சி: கீழ்க்கண்ட சொற்களுள் எவை உயர்திணை? எவை அஃறிணை?

இராமன், மரம், மனைவி, கண்ணன், கல், வீடு, கழுதை, சீதை, கடவுள், தெரு.

பால் என்பது திணையின் பகுப்பு.

உயர்திணைச் சொற்கள் ஆண்பால், பெண்பால், பலர்பால் என்று மூவகைப்படும். ஆண்பால், பெண்பால் ஆகிய இரண்டும் ஒருமை. பலர்பால் என்பது பன்மை.

அஃறிணைச் சொற்கள் ஒன்றன்பால், பலவின்பால் என்று இருவகைப்படும். ஒன்றன்பால் என்பது ஒருமை; பலவின்பால் என்பது பன்மை.

பயிற்சி: கீழ்க்கண்ட சொற்களின் பால் என்ன என்று சொல்லு.

எறும்பு, மக்கள், பிராணிகள், பசு, இடையர், காவற்காரன், தாய், தகப்பன், பெண்கள், சீதை, கூடுகள், வகைகள்.

# 9. வழக்கின் பயன்

ஒரு மரத்திலே இரண்டு மயில்கள் உட்கார்ந்து கொண்டு, பல விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்



டிருந்தன. அப்போது முதல் பறவை, "குளிருக்குக் காரணம் மழைதான்" என்றது. அதைக் கேட்ட இரண்டாம் பறவை அதை மறுத்து, "இல்லை. குளிருக்குக் காரணம் பனிதான்" என்றது. இரண்டுக்கும் வாக்கு வாதம் பலத்து, இரண்டும் ஒன்றையொன்று ஏச ஆரம்பித்தன.

அப்போது நல்ல வெயில்வேளை ஆய்விட்டது. முந்தியநாள் இராத்திரி தனக்குத் தீனி கிடைக்காமல் வருந்திய புலி, காலையில் எங்கும் தேடிப் பார்த்தும், ஒன்றும் அகப்படாமல் கஷ்டப்பட்டது. அது பசியால் வருந்தி, வெயிலில் வாடி, அந்தப் பறவைகள் இருந்த மரத்தினடியில் வந்து, படுத்துக்கொண்டு, கண்ணை மூடிக் கொட்டாவி விட்டுக்கொண்டிருந்தது.

அதைக் கண்ட முதல் பறவை "இதோ கீழே இருக்கிற புலியினிடத்தில் நம்முடைய வழக்கைச் சொல்லித் தீர்த்துக்கொள்ளலாமே" என்றதும், மற்றப் பறவையும் "சரி" என்று ஒப்புக்கொண்டது. உடனே மயில்கள் இரண்டும் புலியைக் கூப்பிட்டு, "புலியாரே, புலியாரே! எங்களுக்குள் உண்டாகியிருக்கும் வழக்கை நீர் தீர்த்துவைக்க மாட்டீரா?" என்றன.

அந்தக் குரலைக் கேட்ட புலி உயர அண்ணாந்து பார்த்தது. பார்க்கவே, உயரமான மரக்கிளையில் தனக்கு எட்டாத இடத்தில் இரண்டு மயில்கள் உட்கார்ந்து கொண்டிருக்கக் கண்டு "நீங்கள் என்னைக் கூப்பிட்டீர் களா? என்ன செய்தி?" என்றது. பறவைகள் புலியை நோக்கித் தம்முடைய வழக்கைத் தீர்க்கும்படி மறுபடியும் கேட்டுக்கொண்டன.

அதற்குப் புலி, "நீங்கள் சொல்வது முறையல் லவே. உங்கள் இனத்தினருக்குள் உண்டாகும் வழக்கை உங்கள் இனத்தார் அல்லவோ தீர்க்கவேண்டும்? அன் னியனான என்னைக்கொண்டு உங்கள் வழக்கைத் தீர்க்கச் சொல்லுகிறீர்களே" என்றது.

"நாங்கள் இருவருமாகச் சம்மதித்து எங்கள் வழக் கைத் தீர்க்க உமக்கு அதிகாரம் கொடுக்கிறோம்" என்றது முதல் பறவை. இரண்டாம் பறவையும், "முழு மனத்

தோடு நானும் சம்மதித்து, அதிகாரம் கொடுக்கிறேன்" என்றது.

எனவே, புலி சற்று யோசிப்பதுபோல் மௌன மாக இருந்து பிறகு, "வழக்குத் தீர்க்க அதிகாரம் கொடுத் தால் மட்டும் போதுமா? தண்டிக்க அதிகாரம் எனக்கு இல்லாவிட்டால், நான் சொல்வதை நீங்கள் ஒப்புக் கொள்ளமாட்டீர்களே. தண்டிக்க அதிகாரம் ஒருவ னுக்கு இல்லாவிட்டால் அவன் தீர்ப்பை யார் மதிப்பார் கள்?" என்றது.

அதைக் கேட்ட பறவைகள், புலி சொன்னது நியாயந்தான் என்று ஒப்புக்கொண்டு, "நீர் கேட்டபடியே நாங்கள் இருவரும் ஒப்புக்கொள்ளுகிறோம். எங்களில் தப்பு வழக்குச் சொல்லியவனைத் தண்டிக்க உமக்கு அதிகாரம் தருகிறோம். உம்முடைய இஷ்டம்போல் எங்களுக்குத் தண்டனை இடலாம்" என்றன.

புலி சற்றே சும்மா இருந்துவிட்டுப் பிறகு "ஆமாம், சரிதான். ஒப்புக்கொண்டீர்கள். நீங்கள் மரத்தின் உச்சிக்கொம்பிலும் நான் மரத்தின் அடியிலுமாக இருந் தால், நீங்கள் எனக்குத் தண்டிக்க அதிகாரம் கொடுத்தால் என்ன? கொடுக்காவிட்டால்தான் என்ன? உங்களுக்குத் தண்டனை ஏதாவது இடவேண்டிவந்தால், இட்ட தண் டனையை இங்கே இருந்தபடியே நிறைவேற்றுவது எப்படி? இன்னுமொன்று: இங்கிருந்து கத்திக் கத்தி எனக்குத் தொண்டை வலிக்கிறது. நீங்கள் சொல்வதும் அரைகுறையாகத்தான் கேட்கிறது" என்றது.

அதைக் கேட்ட பறவைகள் வழக்கில் ஜயிக்க வேண்டும் என்ற வீம்பையே பெரிதாக மதித்து, முன் பின் யோசியாமல், மரத்திலிருந்து கீழே பறந்துவந்து, படுத்துக்கொண்டிருந்த புலியின் வலது பக்கத்தில்

ஒன்றும் இடது பக்கத்தில் ஒன்றுமாக உட்கார்ந்துகொண் டன. அவைகளைப் புலி மிருதுவான மெத்தைபோன்ற, தன்னுடைய முன்காலால் தடவிக் கொடுத்துக்கொண்டு, "இப்பொழுது உங்களுடைய வழக்கைச் சுருக்கமாகச் சொல்லுங்கள் எனக்குப் பசியாயிருக்கிறது; நேரமானால் கோபம் வரும்" என்றது.

இரண்டும் தங்கள் வழக்கைச் சொல்லின. வழக் குப் பேசி முடிந்ததும், புலி ஒரு மயிலைப் பார்த்து, "நீ சொன்ன வழக்குத் தப்பு" என்று சொல்லி, அதைத்



தடவிக்கொண்டிருந்த தன் காலிலுள்ள கூரிய நகங்களை நீட்டி அதைத் திடீரென்று பற்றிக்கொண்டது. அப் போது அந்த மயில் மனம் பதைபதைத்து நடுங்க, மற்றது 'நாம் ஜயித்தோம்' என்று குதூகலம் அடைந் தது. ஆனால், மறுகணமே, புலி அதையும் திடீரென்று பற்றிக்கொண்டு, "நீ சொன்ன வழக்கும் தப்புத்தான்" என்றுசொல்லவே, அதுவும் பதைபதைத்துத் துடித்தது.

வயிற்றுக்கு வேண்டிய ருசியான உணவு கிடைத் தது என்று சந்தோஷப்பட்ட புலியானது சிரித்துக் கொண்டே, என் தீர்ப்பைச் சொல்லுகிறேன், கேளுங்கள்.

"குளிருக்குக் காரணம் மழையும் அல்ல; பனியும் அல்ல. காற்றுத்தான் குளிருக்குக் காரணம்" என்று சொல்லி, அவ்விரண்டு பறவைகளையும் அடித்து வாயில் போட்டுக்கொண்டது.

| | |
|---|---|
| வாக்குவாதம் | தீர்த்துக்கொள்ளலாம் |
| இனத்தார் | அன்னியன் |
| தீர்ப்பு | அரைகுறையாக |
| வீம்பு | பதைபதைத்து |
| தண்டனை | வழக்கு |

## கேள்விகள்:

1. மயில்கள் எதைப்பற்றி வழக்குப் பேசின?

2. புலி சொல்லிய முடிவு என்ன?

3. இந்த வழக்கினால் யாருக்கு லாபம் கிடைத்தது? இந்த மாதிரி வேறு ஏதாவது கதை உனக்குத் தெரியுமா?

## இலக்கணம்:

பெயர்ச்சொற்களின் இடம், தன்மை முன்னிலை படர்க்கை என்று மூன்று வகைப்படும். தன்மை என்பது தன்னைத் தானே குறிக்கும் சொல்லையும், முன்னிலை என்பது முன் நின்று கேட்பவனைக் குறிக்கும் சொல்லையும், படர்க்கை என்பது இந்த இருவகைப் பெயர்ச்சொற்களை அன்றி மற்றெல்லாப் பெயர்ச் சொற்களையும் குறிக்கும்.

பயிற்சி: அடியிற் கண்டபடி அட்டவணையை வரைந்து, கீழ்க்கண்ட சொற்களை அதில் பொருத்தமாக எழுது.

| தன்மை | முன்னிலை | படர்க்கை |
|---|---|---|

நான், அடியேன், வீடுகள், நீங்கள், அவள், வீடு, சோசுவே, மயில்கள், புலியாரே.

பயிற்சி: இந்தப்பாடத்திலுள்ள தன்மை முன்னிலை படர்க்கைச் சொற்கள் சிலவற்றை எடுத்து எழுது.

புலி வந்தது. மயில் புலியைக் கூப்பிட்டது.

இவ்விரண்டு வாக்கியங்களிலும் புலி என்னும் பெயர்ச் சொல் காணப்படுகிறது. முதல் வாக்கியத்திலே அது மாறு படாமல் வருகிறது. இதற்கு முதல் வேற்றுமை என்பது பெயர். இரண்டாவது வாக்கியத்திலே புலி என்னும் சொல் புலியை என்று வேறுபட்டு வருகிறது. புலியை என்னும் சொல் இரண்டாம் வேற்றுமைச் சொல். ஐ என்பது இரண் டாம் வேற்றுமையின் உருபு.

பயிற்சி: கீழ்க்கண்ட சொற்களுள் முதல் வேற்றுமைச் சொற்கள் எவை? இரண்டாம் வேற்றுமைச் சொற்கள் எவை?

மயில்களை, வழக்கு, பறவையை, வழக்கை, புடைவை, பறவை, ஒருவனை, உங்களை, அவைகளை, கூட்டை, மட்டை, என்னை, அன்னை நீங்கள், நான், நீ, உன்னை.

பயிற்சி:

1. மயில்கள் பேசின:—மயில்கள் என்பதற்குப் பதிலாக மயில் என்னும் சொல்லை உபயோகித்து இந்த வாக்கியத்தை மாற்றி எழுது.

2. புலி கண்ணைமூடிக் கோட்டாவிவிட்டுக்கொண் டிருந்தது:— புலி என்பதற்குப் பதிலாகப் புலிகள் என்னும் சொல்லை உபயோ கித்து இந்த வாக்கியத்தை மாற்றி எழுது.

3. பறவைகள் மரத்திலிருந்து கீழே இறங்கின:—இந்த வாக்கி யத்தில் உள்ள பலவின்பால் பெயர்ச்சொல்லை ஒன்றன்பால் சொல்லாக்கி வாக்கியத்தை மாற்றி எழுது.

4. அவர்கள் வண்டியில் ஏறிச் சென்றார்கள்:—இந்த வாக்கி யத்தில் உள்ள பலர்பால் பெயர்ச்சொல்லை ஆண்பால் சொல் லாக்கி ஒரு வாக்கியமும், பெண்பால் சொல்லாக்கி மற்றொரு வாக்கியமும் எழுது.

# 10. அப்பியாசம்

கீழ்க்கண்ட ஆறு படங்களும் ஒரு கதையை விளக்குகின்றன. அவற்றைக் கவனமாகவும் வரிசையாகவும் பார். கதையைச் சுருக்கமாகச் சொல்.

## வயிற்றுப் பிழைப்புக்கு உதவிய நாய்



1



2



3



4



5



6

# 11. கதை எழுதுதல்

## வயிற்றுப் பிழைப்புக்கு உதவிய நாய்

ஒரு சக்கிலியன் தன் வீட்டில் ஒரு நாய் வளர்த்து வந்தான். அதைத் தனக்கு வேலை சம்பாதிக்கும்படி பழக்கி வைத்திருந்தான். ஒவ்வொரு நாளும் அவன் வேலை தேடிப் போகும்போது அதுவும் கூடவே போகும்.........

மேற்கண்ட ஆறு படங்களையும் பார்த்து இந்தக் கதையை எழுதி முடி.

# 12. கடிதம்

'சித்ரா',
ஆற்றூர்,
15—6—1942.

என் பிரியமுள்ள கோபாலா,

நீ புறப்பட்டுப் போனதுமுதல் எனக்குப் பொழுதே போகவில்லை. உனக்கு அப்படி இருக்காது; ஏனென்ருல், நீ பட்டணத்தில் இருக்கிருய்.

எங்கள் ஊர்க் கோயிலில் நடக்கும் உற்சவம் இன்று தொடங்கிவிட்டது. அக்கம் பக்கத்து ஊர்களிலிருந்து நூற்றுக்கணக்கான ஜனங்கள் வந்துகொண்டே யிருக்கிருர்கள். கோயிலில் நாள்முழுவதும் மேளதாளத் தோடு வாத்தியம் கேட்டுக்கொண்டே யிருக்கிறது.

இந்த ஊர் மிராசுதார் பொன்னம்பல முதலியாரை உனக்குத் தெரியுமல்லவா? நாம் அவருடைய தோட்டத்துக்குப் போகும்போதெல்லாம், அவர் நமக்கு இளநீரும் கொய்யாப்பழமும் கொடுப்பாரே. நம்மூருக்கு வரும் வழியில் அவர் ஒரு தண்ணீர்ப்பந்தல் வைத்திருக்கிருர். அங்கே வருகிறவர்களுக்கெல்லாம் குளிர்ந்த நீரும் நல்ல நீர்மோரும் கொடுக்கிருர்கள்.

என்னுடைய நமஸ்காரங்களை மாமாவினிடமும் அத்தையினிடமும் தெரிவிக்கவும்.

உன்னிடமிருந்து பதிலை எதிர்பார்க்கிறேன்.

உன் பிரியமுள்ள,
இராமன்.

ஸ்ரீ வே. கோபாலன் அவர்கள்,

நிர். 45 புதுத் தெரு,

திருவல்லிக்கேணி,

சென்னை.

## பயிற்சி:

இராமன் எழுதிய கடிதத்துக்குக் கோபாலன் பதில் எழுதுவதுபோல் கீழ்க்கண்ட குறிப்புக்களை வைத்துக்கொண்டு விவரமான கடிதம் ஒன்று எழுதவும்.

(1) கடிதம் கிடைத்தல்—கோபாலனுடைய மகிழ்ச்சி. (2) உற்சவம் பார்க்க ஆசை—ஆனால், தன் பள்ளிக்கூடத் திறப்பு. (3) தான் தேறினதால் சந்தோஷம்—நண்பர்கள் தவறினதால் வருத்தம்.

இந்தக் கடிதத்தை மூன்று பாராக்கள் அல்லது பத்திகளாக எழுதவும். முக்கியமான ஒரு கருத்தை விவரமாகச் சொல்லும் சில வாக்கியங்களால் அமைந்த பாடம் முதலியவற்றின் பகுதிக்குப் பாரா என்று பெயர். இதை வாக்கியத் தொடர் என்றும் சொல்லுகிறார்கள்.

## இலக்கணம்:

ஊர் என்பது பெயர்ச்சொல்

| | வேற்றுமை | உருபு |
|---|---|---|
| ஊர் | முதல் வேற்றுமை | — |
| ஊரை | இரண்டாம் வேற்றுமை | ஐ |
| ஊரால் | மூன்றாம் வேற்றுமை | ஆல் |
| ஊரோடு | மூன்றாம் வேற்றுமை | ஓடு |
| ஊருடன் | மூன்றாம் வேற்றுமை | உடன் |

| | | |
|---|---|---|
| ஊருக்கு | நான்காம் வேற்றுமை | கு |
| ஊரில்<br>ஊரின்<br>ஊரிலிருந்து | ஐந்தாம் வேற்றுமை | இல்<br>இன்<br>இருந்து |
| ஊரது<br>ஊருடைய | ஆறும் வேற்றுமை | அது<br>உடைய |
| ஊரில்<br>ஊரிடத்தில்<br>ஊரின்கண் | ஏழாம் வேற்றுமை | இல்<br>இடத்தில்<br>கண் |
| ஊரே | எட்டாம் வேற்றுமை<br>அல்லது விளி வேற்றுமை | ஏ |

குறிப்பு: 'கோபாலா' என்பதில்போல எட்டாம் வேற்றுமை ஆ என்னும் உருபைப் பெற்றும் வரும்.

பயிற்சி: இந்தப் பாடத்திலிருந்து ஒவ்வொரு வேற்றுமைக்கும் ஒரு உதாரணம் எடுத்து எழுது.

கோயிலில் உற்சவம் நடக்கிறது.

இந்த வாக்கியத்தில் கோயிலில் என்னும் சொல்லும், உற்சவம் என்னும் சொல்லும் பெயர்ச்சொற்கள்.

கோயிலில் என்னும் சொல் பெயர்ச்சொல், இடப்பெயர், அஃறிணை, ஒன்றன்பால், ஒருமை, படர்க்கை, ஏழாம் வேற்றுமை. இவ்வாறு ஒரு பெயர்ச்சொல்லின் வகை, திணை, பால், எண், இடம், வேற்றுமை ஆகிய லக்ஷணங்களைச் சொல்லுவதையே அதற்கு இலக்கணம் கூறுதல் என்று சொல்லுகிறேம்.

பயிற்சி: இந்த வாக்கியத்தில் வரும் உற்சவம் என்னும் சொல்லுக்கு இலக்கணம் கூறு.

பயிற்சி: இந்தப் பாடத்தில் வரும் மூன்று பெயர்ச்சொற்களுக்கு இலக்கணம் கூறு.

# 13. அப்பியாசம்

[விளம்பரத்தையும் பயிற்சியையும் மௌனமாகவும் விரைவாகவும் ஒரே தடவை படி. படித்தபிறகு புஸ்தகத்தை மூடு.]

* * * *

## வேக வாகினி

அதிசய விநோத விமானம்

செய்வதற்குப் பத்துலக்ஷம் ரூபாய் செலவு

சென்னையிலிருந்து லண்டனுக்குப் போகிறது

மூன்று நாளில் போய்ச் சேரும்

பெரிய மனிதர் பலர் ஏறிச் செல்லுகிறார்கள்

வாரம் இருமுறை புறப்படும்

திங்கட்கிழமைகளிலும் வெள்ளிக்கிழமைகளிலும்

நீங்கள் ஏறிச் செல்லுங்கள்

* * * *

பயிற்சி: இந்தக் கேள்விகளுக்கு விடை எழுது: (i) விமானத்தில் ஏறிச் சென்னையிலிருந்து லண்டனுக்குப் போக எத்தனை நாள் பிடிக்கும்? (ii) எந்தக் கிழமைகளில் சென்னையிலிருந்து விமானம் புறப்படும்?

# 14. கம்பர்

கம்பர் உலக மகாகவிகளில் ஒருவர். இவர் செய்யுளாக இயற்றிய இராமாயணம் என்னும் காவியமானது என்றும் அழியாப் புகழுடையது. இதற்கு அவர் 'இராமாவதாரம்' என்று பெயரிட்டபோதிலும், இக்காலத்தில் இது 'கம்பராமாயணம்' என்றே வழங்கப்படுகிறது.

இவருடைய சரிதத்தைப்பற்றி நமக்குத் தெரிந்தது மிகச் சொற்பமே. இவர் சோழநாட்டிலுள்ள திருவழுந்தூர் என்னும் ஊரில் பிறந்தவர். இந்த ஊரை இக்காலத்தில் தேரழுந்தூர் என்று சொல்லுகிருர்கள். இவர் உவச்சர்குலத்தில் உதித்தவர்; இவருடைய தகப்பஞர் ஆதித்தன் என்பவர்.

இவரைப்பற்றி எத்தனையோ கதைகள் கர்ணபரம்பரையாக வழங்கி வருகின்றன. இவருக்கு அம்பிகாபதி என்று ஒரு மகன் இருந்ததாகச் சில கதைகள் சொல்லப்படுகின்றன. இக்கதைகளுக்குத் தக்க ஆதாரம் இல்லை.

இவர் வாழ்ந்த காலத்தைப்பற்றி அறிஞர்கள் இன்னும் விவாதம் செய்துகொண்டிருக்கிருர்கள். இவர் கி. பி. ஒன்பதாவது நூற்ருண்டில் இருந்தவர் என்று சில அறிஞர்கள் சொல்லுகிருர்கள். இவர் வாழ்ந்தது பன்னிரண்டாம் நூற்ருண்டில் என்று வேறு சிலர் கூறுகிருர்கள். எல்லா விஷயங்களையும் தீர ஆலோசித்துப் பார்த்தால், கம்பர் வாழ்ந்த காலம் பன்னிரண்டாவது நூற்ருண்டுதான் என்று தோன்றுகிறது.

இவர் மகாகவியாய்ச் சோழ நாட்டில் வாழ்ந்த போதிலும் அந்த நாட்டை ஆண்டுவந்த பேரரசர்களாகிய விக்கிரமசோழனும் இரண்டாம் குலோத்துங்கனும் இவரை இவருடைய தகுதிக்கு ஏற்றபடி ஆதரித்துப்

பாராட்டவில்லை. திருவெண்ணெய்நல்லூரிலே சிறந்த கொடையாளியாக விளங்கிய சடையப்ப முதலியார் என்பவர் இவரை மிகவும் அன்போடு கௌரவித்துப் போற்றி ஆதரித்தார். அவர் தமக்குச் செய்த நன்றியைக் கம்பர் மிகவும் பாராட்டியிருக்கிருர்.

கம்பர் நல்ல கல்வியுடையவர்; தமிழில் மட்டுமன்றி வடமொழியிலும் நன்கு பயின்றவர்; ஆனல் கல்வியினல் இறுமாப்படையாமல் அடக்கத்தை மேற்கொண்டு வாழ்ந்தவர்.

இவர் வைஷ்ணவ மதத்தைச் சேர்ந்தவர்; ஆயினும் பிற மதங்களின்மீது இவருக்கு யாதொரு வெறுப்பும் கிடையாது.

இவர் எழுதிய கம்பராமாயணமானது இராமனுடைய கதையை ஆதியோடந்தமாகக் கூறுவது; மிகவும் ஆழ்ந்த கருத்துக்களை உடையது; எளிய நடையில் உள்ளது. இதிலுள்ள பாக்களின் இனிமையும், அழகும், நயமும் படித்தோர் யாவராலும் போற்றப் பட்டுவருகின்றன.

நீங்கள் பெரியவர்களானதும் இந்த நூலைப் படித்து இன்புறுவீர்கள்.

| | | |
|---|---|---|
| மகாகவி | செய்யுள் | கர்ணபரம்பரை |
| நூற்றுண்டு | கொடையாளி | ஆதியோடந்தமாக |

**கேள்விகள்:**

1. கம்பர் இயற்றிய நூல் யாது?
2. அதைப்பற்றிச் சில வாக்கியங்கள் சொல்லு.

**இலக்கணம்:**

ஒரு பொருளின் தொழிலைக் காட்டுவது வினைச்சொல்.

பயிற்சி: கீழ்க்கண்ட வாக்கியங்களிலுள்ள வினைச்சொற்களை எடுத்து எழுது.

1. சடையப்ப முதலியார் கம்பரை ஆதரித்தார்.

2. இவரைப்பற்றி எத்தனையோ கதைகள் கர்ணபரம்பரையாக வழங்கிவருகின்றன.

3. இவர் எழுதிய கம்பராமாயணம் இராமருடைய கதையைக் கூறுகிறது.

ஒரு வாக்கியத்தில் முடிந்த தொழிலைக் குறிக்கும் வினைச் சொல்லுக்கு வினைமுற்று என்பது பெயர். முதல் வாக்கியத் தில் உள்ள ஆதரித்தார் என்னும் வினைச்சொல்லானது முடிந்த தொழிலைக் குறிக்கிறது. ஆதலால் அது வினைமுற்று.

முடிவடையாத தொழிலைக் குறிக்கும் சொல்லுக்கு எச்சம் என்பது பெயர். வினைச்சொல்லைக்கொண்டு முடியும் வினைச் சொல்லை வினையெச்சம் என்றும், பெயர்ச்சொல்லைக்கொண்டு முடியும் வினைச்சொல்லைப் பெயரெச்சம் என்றும் சொல்லுகிறோம்.

இரண்டாவது வாக்கியத்தில் உள்ள வழங்கி என்னும் வினைச்சொல்லானது முடிவடையாத தொழிலைக் குறிக்கிறது; வருகின்றன என்னும் துணைவினைச்சொல்லால் முடிவடைகிறது. ஆதலால் இது வினையெச்சம்.

மூன்றாவது வாக்கியத்திலுள்ள எழுதிய என்னும் சொல் லும் முடிவடையாத தொழிலைக் காட்டும் வினைச்சொல்லே. ஆனால் அது கம்பராமாயணம் என்னும் பெயர்ச்சொல்லால் முடிவடைகிறது. ஆகையால் அது பெயரெச்சம்.

பயிற்சி: கீழ்க்கண்ட வாக்கியங்களிலுள்ள வினைச்சொற் களுள் முற்றுவினை, பெயரெச்சம், வினையெச்சம் ஆகியவற்றை எடுத்து எழுது.

1. கம்பர் இயற்றிய இராமாயணம் அழியாப் புகழ் உடையது.

2. சடையப்பவள்ளல் கம்பரை ஆதரித்துப் போற்றினர்.

3. கம்பர் வாழ்ந்த காலம் பன்னிரண்டாவது நூற்றுண்டு என்று சொல்லி வருகிறார்கள்.

4. கம்பர் எழுதிய ராமாயணத்தை நீங்கள் படித்து இன்புறவேண்டும்.

பயிற்சி: மேலே உள்ள வாக்கியங்களில் காணப்படும் வினைமுற்று ஒவ்வொன்றுக்கும் திணை, பால், இடம் கூறு.

# 15. அப்பியாசம்

[கதையையும் பயிற்சியையும் மௌனமாகவும் விரைவாக வும் ஒரே தடவை படி. படித்தபிறகு புஸ்தகத்தை மூடு.]

*　　*　　*　　*

ஓர் அரசன் நியாயசபையில் உட்கார்ந்திருந்தான். அப்பொழுது இரண்டு தாய்மார்கள் ஒரு கைக் குழந்தை யைக் கொண்டுவந்தார்கள். அவர்களுள் கண்ணம் மாள் 'ஐயா, இது என் குழந்தை' என்றாள்; முனியம் மாள் 'அன்று; இது என் குழந்தை' என்றாள்.

அரசன் அவர்களைப் பார்த்து, 'இதற்கு ஏன் சண்டை போடுகிறீர்கள்? கத்தியால் குழந்தையை இரண்டு துண்டாக்கி ஆளுக்கு ஒரு துண்டு தருகிறேன்' என்றான்.

'அரசன் உத்தரவின்படி வெட்டுங்கள்' என்றாள் கண்ணம்மாள்.

'குழந்தையை வெட்டவேண்டாம். கண்ணம்மா ளிடமே கொடுத்துவிடுங்கள்' என்றாள் முனியம்மாள்.

அரசன் குழந்தையை அதன் தாயிடம் கொடுத் தான். குழந்தையின் தாய் யார்? கண்ணம்மாளா? அல் லது முனியம்மாளா?

*　　*　　*　　*

பயிற்சி: குழந்தையின் தாய் யார் என்று எழுது. கீழ்க் கண்டவற்றுள் கதைக்குப் பொருத்தமான தலைப்பை எடுத்து எழுது: i. அறிவாளியான அரசன் ii. இரண்டு தாய்கள் iii. ஒரு குழந்தை.

# 16. ஆறு

1. கல்லும் மலையும் குதித்துவந்தேன்—பெருங்
காடும் செடியும் கடந்து வந்தேன்.
எல்லை விரிந்த சமவெளி—எங்கும் நான்
இறங்கித் தவழ்ந்து தவழ்ந்து வந்தேன்.

2. காயும் நிலத்தழல் ஆற்றிவந்தேன்—அதில்
கண்குளிரப் பயிர் கண்டுவந்தேன்.
ஆயும் மலர்ப்பொழில் செய்துவந்தேன்—அங்கென்
ஆசை தீரவிளை யாடிவந்தேன்.

3. ஏருத மேடுகள் ஏறிவந்தேன்—பல
ஏரி குளங்கள் நிரப்பி வந்தேன்.
ஊருத ஊற்றிலும் உட்புகுந்தேன்—மணல்
ஓடைகள் பொங்கிட ஓடிவந்தேன்.

4. பஞ்சை அரைத்துநூல் நூற்றுவந்தேன்—சீனி
பாகமாய்ச் செய்து கொடுத்துவந்தேன்.
நெஞ்சம் உலர்ந்த நெடுநகரில்—குழாய்
நீராகவும் சென்று பாய்ந்துவந்தேன்.

—சி. தேசிகவிநாயகம் பிள்ளை

எல்லை விரிந்த சமவெளி = அகன்று பரந்த சமமான பிரதேசம்; காயும் = சூடுள்ள; அழல் = நெருப்பு; நிலத்தழல் = வெம்மை மிக்க நிலத்தின் சூடு; ஆயும் = கொண்டாடப்படுகிற; பாகமாய் = பக்குவமாய்; நெஞ்சம் உலர்ந்த நெடு நகர் = ஏரிகளும் குளங்களும் தம்மிடத்தே இல்லாத பெரிய நகரத்தின் நெஞ்சே உலர்ந்துபோய்விட்டதாகக் கவி கற்பனை செய்கிறார்.

பயிற்சி: இதைப்படித்து, மனப்பாடம் செய்து, உரிய செயல்களோடு ஒப்பி.

## கேள்விகள்:

1. இந்தப் பாட்டை 'ஆற்றின் சுயசரிதை' என்று சொல்லலாம் அல்லவா? இதை வசனமாக, வரிசைப்படுத்தி, விளக்கமாக எழுது.

2. ஆற்றைப்பற்றி இந்தப் பாட்டில் சொல்லியிருப்பதை நீ சொல்வதுபோல் சொல்லு.

3. இந்தப் பாட்டில் ஆறு யாரோடு பேசுவதாகக் கவி காட்டுகிறார்? அது உனக்கு எப்படித் தெரிகிறது?

## இலக்கணம்:

வினைச்சொற்களுக்கு—அதாவது, வினைமுற்றுக்களுக்கும், பெயரெச்சங்களுக்கும், வினையெச்சங்களுக்கும்—மூன்று காலம் உண்டு. அவற்றுக்கு இறந்தகாலம், நிகழ்காலம், எதிர் காலம் என்பன பெயர்கள்.

தொழில் நடந்ததைத் தெரிவிக்கும் வினைச்சொல்லின் காலம் இறந்தகாலம்; தொழில் நடக்கிறதைக் காட்டும் காலம் நிகழ்காலம்; தொழில் நடக்கப்போவதைக் காட்டும் காலம் எதிர்காலம்.

பயிற்சி: கீழ்க்கண்ட வினைச்சொற்களின் காலத்தைக் கூறு.

வந்தேன், வருகிறேன், வருவேன், வந்த, வருகிற, வரும்.

பயிற்சி: கீழ்க்கண்ட வினைச்சொற்களின் காலத்தைக் கூறு. அவற்றை மற்ற இரண்டு காலச் சொற்களாக மாற்றி எழுது.

போகிறேன்; வருகிறாள்; ஓடிற்று; படிப்பேன்; விளையாடினார் கள்; சென்றது; குதித்தாள்; கடந்தது; தவழ்ந்தான்; செய்வேன்; நிரப்பினாள்; கொடுத்தீர்கள்; வருவாய்; புகுந்தது; ஏறினான்; கண் டாய்.

பயிற்சி: மேலேகண்ட ஒவ்வொரு வினைச்சொல்லுக்கும் திணை, பால், எண், இடம், காலம் ஆகிய ஐந்தையும் சொல்.

இவ்வாறு ஒரு வினைச்சொல்லின் திணை, பால், எண், இடம், காலம் முதலிய லக்ஷணங்களைச் சொல்லுவதை அதற்கு இலக்கணம் கூறுதல் என்று சொல்லுகிறோம்.

# 17. "இன்னும் இரண்டு வரி"

இப்பொழுது ஜெர்மன் சாம்ராஜ்யமாக இருக்கும் பிரதேசமானது சற்றேறக்குறைய இருநூறு வருஷங்



களுக்கு முன்னே பல சிறிய ராஜ்யங்களாகப் பிரிந்திருந்தது. அவற்றுள் ஒன்ருகிய பிரஷியாவுக்கு அக்காலத்திலே பிரெடெரிக் என்பவர் மன்னராக இருந்தார்.

சண்டைகள் மலிந்த காலம் அது. பிரெடெரிக்கும் மண்ணாசை தலைக்கேறியவர். அதனால் அவர் எத்தனையோ தடவை சண்டைகளை நடத்தினர். பல சண்டைகளில் வெற்றியடைந்து, பிரஷியா நாட்டை மிகவும் உயர்ந்த நிலைமைக்குக் கொண்டுவந்தார்.

அவருடைய ஆயுளின் பெரும்பகுதியானது பாசறைகளில் கழிக்கப்பட்டது. பாசறையானது மிகவும் அபாயகரமான இடம். எப்பொழுது சமயம் வாய்க்

கும் என்று எதிரிகள் பார்த்துக்கொண்டே யிருப்பார்கள்; தம்முடைய ஆட்களையும் கூட முற்றிலும் நம்பமுடியாது. கலகமும் குழப்பமும் திடீரென்று உண்டாகக் கூடும். எதிரியின் ஆட்களும், ஒற்றர்களும், சிநேகிதர்களைப் போல் பாசாங்கு செய்து, சமயம் பார்த்துக் கெடுக்க முயலுவார்கள். ஆகையால் பகலிலேகூடப் பாசறை யிலே ஒவ்வோர் அடியையும் பார்த்துப் பார்த்தே வைக்க வேண்டும். ஒவ்வொரு நிமிஷமும் வெகு ஜாக்கிரதை யாக இருக்கவேண்டும்.

பகலிலேயே இப்படியானால் இருள் சூழ்ந்த இரவைப்பற்றிக் கேட்கவே வேண்டாம். சைனியம் என்ன செய்கிறது? விழித்துக்கொண்டிருக்கிறதா? தூங்குகிறதா? வேலை செய்கிறதா? திடீரென்று தாக்கப்போகிறதா? இவைகளுள் ஒன்றும் எதிரிக்குத் தெரியலாகாது. பாசறை எங்கே இருக்கிறது என்கிற அடையாளங்கூட எதிரிக்குத் தெரியாமல் இருந்தால் நல்லது.

ஆகையால், போர்களிலே மிக்க அனுபவமுள்ள பிரெடெரிக் தம் சைனியத்திற்கு மிகவும் கண்டிப்பான உத்தரவு ஒன்று போட்டிருந்தார். இரவிலே ஒரு நேரத்தைக் குறிப்பிட்டு, “இரவில் இந்த நேரத்துக்குப் பிறகு பாசறையிலே ஒரு விளக்குக்கூட எரியவிடக்கூடாது. கட்டளையை மீறி நடப்பவர்களுக்கு மரண தண்டனை விதிக்கப்படும்” என்ற உத்தரவைப் பிறப்பித்திருந்தார். தம்முடைய ஆணையை யாராவது மீறி நடக்கிறார்களா என்று மேற்பார்ப்பதைத் தம்முடைய மிக முக்கிய வேலை யாக வைத்துக்கொண்டார். அந்த உத்தரவுப்படி நடப்பது எவ்வளவு அவசியம் என்பதை அவர் நன்கு அறிந்தவர். ஆகையால் அவர் அடிக்கடி தம்முடைய பாசறையைச் சுற்றிப் பார்த்துப் பாதுகாத்து வந்தார்.

ஒரு நாள் அவர் அப்படிச் சுற்றிக்கொண்டு வரும் போது, குறித்த நேரத்துக்குப் பிறகு, கூடாரம் ஒன்றில் விளக்கு எரிவதைக் கண்டு, ஆச்சரியமடைந்து, அந்தக் கூடாரத்துக்குள் போனார். அங்கே அவருடைய தள கர்த்தர்களுள் ஒருவர் கடிதம் ஒன்றை எழுதி முடித்து அதை ஒட்டப்போகும் சமயமாயிருந்தது. ஆனால் கடி தம் எழுதுவதில் முழு மனத்தையும் செலுத்தியிருந்த தளகர்த்தர் பிரெடெரிக் வந்ததைக் கவனிக்கவில்லை.

"ஒட்டாதே; சற்றுப் பொறு" என்றார் பிரெடெரிக். மேஜையின்மேல் குனிந்து எழுதிக்கொண்டிருந்த தள கர்த்தருக்குத் திடுக்கிட்டது. அவர் நிமிர்ந்து பார்த் தார். கண்களில் சினம் பொங்க அரசர் எதிரே நிற்கக் கண்டார்.

"விளக்கு எரியக்கூடாது என்று நான் உத்தரவு போட்டிருக்கிறேன், தெரியுமா?" என்றார் அரசர்.

"தெரியும்" என்று ஈனக்குரலில் பதில் வந்தது.

"பின்னே என் உத்தரவை ஏன் மீறி நடந்தாய்?" என்று மிகவும் கடுமையாய்க் கேட்டார் பிரெடெரிக்.

"என் மனைவிக்குக் கடிதம் எழுதிக்கொண்டிருந் தேன்."

தளகர்த்தரின் கண்கள் மன்னிக்கவேண்டுமென்று கெஞ்சுபவைபோல் தோன்றின.

"அப்படியா? கடிதத்தை ஒட்டுவதற்குமுன் இன்னும் இரண்டு வரி எழுதி முடி" என்றார் பிரெடெரிக். தள கர்த்தர் தயங்கினார்.

"பேனாவை எடு. நான் சொல்லுகிறபடி எழுது" என்றார் பிரெடெரிக். தளகர்த்தர் பேனாவைக் கையில் எடுத்தார்.

பிரெடெரிக், "சரி. எழுது: 'இந்தக் கடிதம் உன் கைக்கு வந்து சேருவதற்கு முன், அரசருடைய ஆணையை மீறி நடந்ததற்காக, எனக்கு மரண தண்டனை



ஏற்பட்டு என்னைச் சுட்டுக் கொன்றிருப்பார்கள்' என்று எழுது! எழுதியாய் விட்டதா?—சரி. கடிதத்தை ஒட்டு! இங்கே கொடு. நான் அனுப்பிவிடுகிறேன்" என்றார்.

அரசனுடைய ஆணை நிறைவேற்றப்பட்டது. தண்டனையைப் பார்த்தால் மிகவும் கொடிய உத்தரவாகத் தோன்றுகிறது அல்லவா? உண்மைதான். ஆனால் உத்தரவை மீறிய இந்த ஒருவருடைய அஜாக்கிரதையினால் அந்தப் பாசறையிலுள்ள சைனியம் முழுவதுக்குமே அபாயம் வந்திருக்கலாம் அல்லவா?

| | | |
|---|---|---|
| சாம்ராஜ்யம் | பிரதேசம் | ஆணை |
| பாசறை | அபாயகரமான | மண்ணாசை |
| பாசாங்கு | முக்கியம் | அபாயம் |
| கூடாரம் | தளகர்த்தர் | ஒற்றர் |

இதை நாடகமாக நடிக்கலாம்.

**கேள்விகள்:**

1. பிரெடெரிக் என்பவர் யார்?

2. அவர் என்ன உத்தரவிட்டிருந்தார்? ஏன்?

3. அரசனுடைய ஆணையை மீறினதால் தளகர்த்தனுக்கு என்ன தண்டனை கிடைத்தது?

4. அந்தத் தண்டனையைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்?

**இலக்கணம்:**

| | |
|---|---|
| போவான் | போகான் |
| போன | போகாத |
| போய் | போகாமல் |

இச்சொற்கள் யாவும் வினைச்சொற்கள். இவற்றுள் எவை முற்றுவினைச் சொற்கள்? எவை எச்சவினைச் சொற்கள்? இவற்றுள் இடது பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ள மூன்று வினைச் சொற்களும் தொழில் நடப்பதைக் குறிக்கின்றன. இவ்வகைச் சொற்களுக்கு உடன்பாட்டு வினைச்சொற்கள் என்பது பெயர். வலது பக்கத்தில் கொடுக்கப்பட்ட மூன்று வினைச்சொற்களும் தொழில் நடவாமையைக் குறிக்கின்றன. இவ்வகைச் சொற்களுக்கு எதிர்மறை வினைச்சொற்கள் என்பது பெயர்.

பயிற்சி: கீழ்க்கண்ட சொற்களில் உடன்பாட்டு வினைச் சோற்கள் எவை? எதிர்மறை வினைச்சோற்கள் எவை?

வருகிறான்; உண்ணான்; இருப்பான்; செல்லான்; போவேன்; வரவில்லை; வந்ததுண்டு; வரமாட்டான்.

* * * *

அரசன் ஆணையை நிறைவேற்றினான்.

இந்த வாக்கியத்தில் எழுவாய் எது? பயனிலை எது? செயப்படுபொருள் எது? இதில் நிறைவேற்றினான் என்னும் வினையைச் செய்தவன் அரசன். அரசன் என்பது எழுவாய். எழுவாய் செய்வதாகக் கூறும் வினையைக் குறிப்பிடும் சொல்லுக்குச் செய்வினை என்பது பெயர்.

இதே வாக்கியத்தை

அரசனுடைய ஆணை நிறைவேற்றப்பட்டது

என்றும் சொல்லலாம். இவ்வாக்கியத்தின் எழுவாய் ஆணை என்னும் சொல் அல்லவா? ஆணை என்னும் எழுவாய்

எதையும் செய்ததாக இந்த வாக்கியம் கூறவில்லை. ஆனால் ஆணை நிறைவேற்றப்பட்டதாக, அதாவது செய்யப்பட்டதாக இந்த வாக்கியத்திலுள்ள வினைச்சொல் கூறுகிறது. இவ்வகையான வினைச்சொல்லுக்குச் செயப்பாட்டு வினை என்பது பெயர்.

பயிற்சி: கீழ்க்கண்ட வாக்கியங்களில் செய்வினை எவை? செயப்பாட்டு வினை எவை?

ஜெர்மனி தேசத்தில் பிரெடெரிக் என்பவர் மன்னராக இருந்தார். பல சண்டைகளில் அவர் வெற்றியடைந்தார். அவருடைய எதிரிகள் தோற்கடிக்கப்பட்டார்கள். அவருடைய ஆயுளின் பெரும் பகுதி பாசறைகளில் செலவிடப்பட்டது. 'நெடுநேரம் விளக்கு எரியக்கூடாது. உத்தரவை மீறினவர்கள் தண்டிக்கப்படுவார்கள்' என்று அவர் கட்டளை இட்டார். கட்டளையை ஒருவன் மீறி நடந்தான். அவன் தண்டிக்கப்பட்டான்.

பயிற்சி:

1. கீழ்க்கண்ட வினு வாக்கியங்களை எதிர்மறை வாக்கியங்களாகப் பொருள் மாருதபடி மாற்றி எழுது:

(1) நான் மீறி நடப்பேனு?
(2) நான் போட்ட உத்தரவை மாற்றுவேனு?
(3) பலகாரத்தைக் கண்டால் நானு விடுவேன்?
(4) கடிதம் எழுதாமல் இருப்பேனு?

2. கீழ்க்கண்ட எதிர்மறை வாக்கியங்களை வினு வாக்கியங்களாகப் பொருள் மாருதபடி மாற்றி எழுது:

(1) நான் புஸ்தகமில்லாமல் பள்ளிக்கூடம் போகவே மாட்டேன்.
(2) நாயைக் கண்டால் நான் பயப்படவே மாட்டேன்.
(3) பரீக்ஷையில் நான் தவறவே மாட்டேன்.
(4) நான் தண்டிக்காமல் விடவே மாட்டேன்.

# 18. ஒட்டகைச்சிவிங்கி

(சுயசரிதை—முதற் பாகம்)

இப்பொழுது நான் இவ்வளவு பெரியவனுயிருக் கிறேனே! நான் குழந்தையாயிருந்தபொழுது எவ்வளவு சிறியவனு யிருந்தேன் தெரியுமா? நான் மிகவும் சின்னக் குட்டியாயிருந்தபொழுது—நான் பிறந்து இரண்டு மூன்று வாரம்தான் அப்பொழுது ஆகியிருக்கும்—நான் என்னுடைய தாயின் பக்கத்திலேயே எப்பொழுதும் இருப்பேன். அவளை விட்டுப் பிரியவேமாட்டேன். அவள் போகும் இடம் எல்லாம் கூடவே போவேன். என் தாய் தன் தலையை நிமிர்த்தி மரங்களின் கிளைகளிலிருந்து தழைகளைப் பறித்துத் தின்னுவாள். இடை இடையே கழுத்தை வளைத்துத் தலையைக் குனிந்து என் உடலை அன்போடு தன் நாவினல் நக்கிக் கொடுப்பாள். ஆனல், அவள் தழை மேயும்போதெல்லாம் அவள் சந்தோஷமாகவும் உற்சாகமாகவும் மேய்ந்தாள் என்று சொல்வதற்கில்லை. அவளைப் பார்த்தால் ஏதோ மனக்கவலையுள்ளவள் போலவும், ஏதோ ஒரு பேராபத்து வரும் என்று பயந்துகொண்டே யிருப்



பவள் போலவும் எனக்குத் தோன்றிற்று. எனக்கு ஒன்றுமே தெரியவில்லை. அம்மா யாரைக்கண்டு பயப்படுகிருள்? எதற்காகப் பயப்படுகிருள்? நாம் ஒருவருக்கும் ஒரு கெடுதியும் செய்யவில்லையே என்று பலவிதமாக நான் எண்ணினேன். அம்மாவைக் கேட்டுப் பார்த்தேன். அவள் ஒன்றும் சொல்லவில்லை. ஆனல், இடை இடையே, அடிக்கடி, தன் தலையை உயர்த்தி நாலுபக்கமும் திருப்பிக்கொண்டு, மோப்பம் பிடித்துப் பார்த்து வந்தாள். அவள் கவலைப்படுவதற்குக் காரணம் இன்னதென்று எனக்கும் சீக்கிரத்தில் தெரியவந்தது.

இளவேனிற்காலத்தில் ஒருநாள் — அப்போது எனக்கு அதிக வயதாகிவிடவில்லை—என் அம்மாவும் நானுமாக ஒரு சோலையில் மேய்ந்துகொண்டிருந்தோம். அக்கம்பக்கத்தில் வேறு பல ஒட்டகைச்சிவிங்கிகளும் தழை மேய்ந்துகொண்டிருந்தன. அவைகள் எல்லாம் நன்ருய் வளர்ந்தவைகள். நாங்கள் எப்போதும் கூட்டம் கூட்டமாகவே, அன்னியோன்னியமாய் வாழ்பவர்கள். ஆனல் அந்தக் கூட்டத்தில் சிறுவன் நான் ஒருவன் தான்.

அது என்ன, அது? என்ன சத்தம்? பக்கத்தில் எங்கேயோ இருந்துதான் அந்தச் சத்தம் கேட்டது. அதை ஒருமுறை கேட்டவர்கள் அதை மறக்கவே முடியாது; அவ்வளவு பயங்கரமான சத்தம். பாதி உறுமல், பாதி இருமல்போலத் தோன்றிற்று. ஒன்றும் தெரியாத எனக்குக்கூடத் திகில் பிடித்துவிட்டது. ஆம்! இரையைக் கண்ட சிங்கத்தின் கர்ஜனைதான் அது. அன்றுதான் நான் முதன்முதலில் சிங்கத்தைப் பார்த்தேன். அதன் உடல் நாற்றம் என் மூக்கில் பட்டதும் எனக்கு மூச்சு அடைத்துவிடும்போல் இருந்தது. அன்று கண்ட

காட்சியும், அன்று மோந்த நாற்றமும் என் மனத்தை விட்டு ஒருநாளும் அகலவே மாட்டா. அதற்கப்புறம் வெகு தூரத்துக்கு அப்பால் சிங்கம் வரும்போதே நான் கண்டுகொள்வேன்; அதற்கும் அப்பால் கண்ணுக்கு எட்டாத இடத்தில் அது வரும்போதும் மோப்பத்தால் அதைத் தெரிந்துகொள்வேன்.

அன்று சிங்கம் வந்ததைக் கண்டவுடன் மரம்போல் உயர்ந்து வளர்ந்திருந்த ஒட்டகைச்சிவிங்கிகளெல்லாம் ஓட்டம் பிடித்தன. என் அம்மாவும் அவர்கள் ஓடும் போது கூட ஓடியிருக்கலாம். ஆனால் அவள் ஓட வில்லை. அங்கேயே நின்றாள். அவள் ஓடியிருந்தால் நான் என்ன செய்திருக்கமுடியும்? அப்பொழுது நான் அவ்வளவு உயரமில்லை. நடப்பதற்கும் நன்றாகக் கற்றுக் கொள்ளவில்லை. என் சிறு கால்கள் பயத்தாலும், பல வீனத்தாலும் நடுங்கின. இந்நிலையில் நாற்கால்-பாய்ச் சலில் ஓடும் பெரிய ஒட்டகைச்சிவிங்கிகளோடு கூடச் சேர்ந்து நானும் எப்படி ஓடமுடியும்? பயத்தால் உடல் நடுங்கினபோதிலும் எனக்குச் சிரிப்பும் ஒரு பக்கம் வந்தது. அவ்வளவு பெரிய ஒட்டகைச்சிவிங்கிகள் கழுத்தை இப்படியும் அப்படியும் ஆட்டிக்கொண்டு ஓடுவது பார்ப்பதற்குச் சிரிப்பாகத்தான் இருந்தது. அவை ஓடும்போது, ஒரு விலாப்பக்கத்திலுள்ள இரண்டு கால்களும் ஒன்றாக நகரும். உடனே மறு விலாப்பக்கத்தி லுள்ள இரண்டு கால்களும் ஒன்றுபோல நகரும். நீண்ட காலும் நீண்ட கழுத்துமாய் அவை ஆடி ஆடிக் கொண்டு ஓடுவதைக் கண்டவர் எவராலும் சிரிக்காமல் இருக்கமுடியாது. நான் இப்பொழுது ஓடுவதைப் பார்க்கும் மற்ற மிருகங்கள் எல்லாம் என்னைப் பார்த்துச் சிரிக்கும் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை.

எதையோ சொல்ல வந்தவன் வேறு எதையோ சொல்லிக் கொண்டு போகிறேனே.

என்னுடைய தாயும் சிங்கத்தைக் கண்டு நடுங்கித் தான் போயிருப்பாள். ஆனல் என்மேல் அவளுக் கிருந்த அளவற்ற அன்பினல், அவளுடைய மனத்தி லிருந்த பயம் முழுவதையும் மறந்து, வீரத்தாயாகி விட்டாள். அவள் அவ்வளவு உயரமாயும் நல்ல வளர்த்தியாயும் இருந்தபோதிலும், தற்காப்புக்கு வேண் டிய இயற்கை ஆயுதங்களாகிய உறுப்புக்கள் ஒன்றும் அவளிடம் இல்லை. அவளுடைய தலையிலே கொம்பு போன்ற இரண்டு சிறு உறுப்புக்கள் இருக்கின்றன; உண் மைதான். ஆனல் அவை தோலால் மூடப்பட்டவை. காகிதத்தைச் சுருட்டிக் கொம்பாக வைத்தால் அதற்கு எவ்வளவு பலம் இருக்குமோ அவ்வளவு பலம்தான் அந்தக் கொம்புகளுக்கும் உண்டு என்று சொல்லலாம். 'வாயில் பல் இல்லையா? கடிக்கக்கூடாதா?' என்று கேட்க லாம். ஆனல் இலைகளையும் புல்லையும் கொய்வதற்குத் தான் எங்கள் பற்கள் உதவுமே தவிரக் கொடிய காட்டு மிருகத்தை எதிர்த்துக் கடிக்க அவை உதவவே உதவா. ஆனல் என் தாய் இதை நினைக்கவே இல்லை. தன் னுடைய நாலு கால்களுக்கும் அடியில், தன் உடலின் கீழ் என்னை நிற்கவைத்தாள்; சிங்கத்தை எதிர்க்கத் தயா ராய் நின்ருள்.

**பயிற்சி:**

1. *கீழ்க்கண்ட வாக்கியங்களில் உள்ள உடன்பாட்டு வினைகளை எதிர்மறை வினைகளாகவும் எதிர்மறை வினைகளை உடன்பாட்டு வினைகளாகவும் மாற்றி, வாக்கியங்களை எழுது.*

என்னுடைய தாயின் பக்கத்தில் இருப்பேன். அவளை விட்டுப் பிரியமாட்டேன். அவள் கூடவே போவேன். அவள்

சந்தோஷமாக மேயவில்லை. அவள் கவலைப்பட்டாள். அதற்குக் காரணம் தெரியவில்லை.

2. கீழ்க்கண்ட வாக்கியங்களில் உள்ள செய்வினைகளைச் செயப்பாட்டு வினைகளாகவும், செயப்பாட்டு வினைகளைச் செய்வினைகளாகவும் மாற்றி எழுது.

(i) என் தாயால் தழைகள் தின்னப்பட்டன.

(ii) எங்களால் ஒருவருக்கும் கெடுதல் செய்யப்படவில்லை.

(iii) கூலியாள் மரத்தை வெட்டினான்.

(iv) ராமன் கிருஷ்ணனை அடித்தான்.

3. கீழ்க்கண்ட வாக்கியங்களைச் சாதாரண வாக்கியங்களாகப் பொருள் மாறாமல் மாற்றி எழுது.

(i) ஒட்டகைச்சிவிங்கி எவ்வளவு உயரமான மிருகம்!

(ii) சிங்கத்தின் கர்ஜனை எத்துணை பயங்கரமான ஓசை!

(iii) ஒட்டகைச்சிவிங்கிகள் ஓடுவது எவ்வளவு வேடிக்கையாயிருக்கிறது!

4. ஜதை ஜதையாகக் கொடுத்திருக்கும் கீழ்க்கண்ட சொற்களின் பொருள் விளங்கும்படி அவற்றைச் சொந்த வாக்கியங்களில் உபயோகித்து எழுது.

நீலம்—நீளம்; தோல்—தோள்; அவள்—அவல்; தலை—தழை;
வலை—வளை; இரை—இறை; அகல—அகழ; விலா—விழா;
இரந்த—இறந்த; எரி—எறி; அரை—அறை; கரை—கறை.

5. இவ்விரண்டு வாக்கியங்களையும் ஒரே வாக்கியமாகச் சேர்த்து எழுது.

(i) என் தாய் தன் தலையை நிமிர்த்துவாள். மரங்களின் கிளைகளிலிருந்து தழைகளைப் பறித்துத் தின்னுவாள்.

(ii) சிங்கத்தின் உடல் நாற்றம் என் மூக்கில் பட்டது. எனக்கு மூச்சு அடைத்துவிடும்போல் வந்தது.

(iii) அன்று கண்ட காட்சி என் மனத்தைவிட்டு ஒரு நாளும் அகலவே மாட்டாது. அன்று மோந்த நாற்றம் என் மனத்தைவிட்டு ஒருநாளும் அகலவே மாட்டாது.

# 19. ஒட்டகைச்சிவிங்கி

(சுயசரிதை—இரண்டாம் பாகம்)




என் தாய் ஓடாது நிற்பதைக் கண்ட சிங்கம் ஒரு கணம் திகைத்து நின்றது. மறு கணம் அது பதுங்கி, என் தாயின் கழுத்தை இலக்கு வைத்துப் பாய்ந்தது. அதே சமயத்தில் என் தாய் தன் பின்கால்களை ஊன்றி, தன்னுடைய முன்கால்கள் இரண்டையும் உயர்த்திப் பளீரென்று தன்னுடைய முழு பலத்தோடு சிங்கத்தை உதைத்தாள். எதிர்பாராத வண்ணமாய் அடியுண்ட சிங்கம் சுருண்டு விழுந்தது; உறுமிக்கொண்டு சிறிது தூரம் பின்வாங்கிற்று. மறுபடியும் எங்களைப் பார்த்துத் திரும்பி எதிர்த்து நின்றது. மறுபடியும் அது பதுங்கிப் பாய எத்தனிக்கையில், தெய்வவசமாக எங்களுக்குத் துணை வந்து சேர்ந்தது. பக்கங்களிலே உள்ள மரக்கிளைகள் படபட வென்று முறிபடுவதும், புதர்களும் சிறு மரக் கன்றுகளும் சடசட வென்று ஒடிந்து விழுவதும் காதில் கேட்டன. அந்தச் சிங்கமும் அவ்வோசையைக்

கேட்டுத் திகில் அடைந்ததுபோல் அந்தப் பக்கமாகத் திரும்பிற்று. இதற்குள் அவ்விடத்துப் புதர்களை மிதித்து நசுக்கிக்கொண்டு யானைக் கூட்டம் வேகமாக வரவே, சிங்கம் பயந்து சீறிக்கொண்டு சிறிது தூரம் அப்பால் போயிற்று. என் தாய் என்னை மறுபுறமாகத் தள்ளினாள். தண்ணீர்க்குழியைத் தேடிச் செல்லும் அந்த யானைக் கூட்டம் எங்களுக்கும் சிங்கத்துக்கும் இடையே சென்றது. அந்தக் கூட்டத்தின் ஒரு புறமாகவே நாங்களும் சென்றோம். மறுபக்கத்தில் உறுமிக்கொண்டு நின்ற சிங்கம் நாங்கள் தப்பி ஓடியதைக் கவனிக்கவில்லையோ? அல்லது கவனித்திருந்தபோதிலும் யானைக் கூட்டத்துக்குப் பயந்து எங்களைப் பின்தொடர்ந்து வரவில்லையோ? யார் கண்டார்கள்? அன்று நாங்கள் பிழைத்தது மறு பிழைப்பு.

இந்த நிகழ்ச்சி நிகழ்ந்து வெகுநாள் வரையில் எனக்கு வேறொரு ஆபத்தும் உண்டாகவில்லை. நானும் நன்றாக உயர்ந்து வளர்ந்தேன்; உடலுக்கும் நல்ல பலம் வந்துவிட்டது. என்னைவிட உயரமானவர் ஒருவரையும் நான் பார்த்ததில்லை. இப்பொழுது என் உயரம் பதினேழடி. சிறு மரங்களின் உச்சிக்கிளைகளிலுள்ள தளிர் இலைகளை நான் எளிதாகப் பறித்து உண்கிறேன்.

என்னுடைய நாவைப் பார்த்திருக்கிறீர்களா? அது எவ்வளவு விந்தையான உறுப்புத் தெரியுமா? என் வாய்க்கு வெளியே ஓரடி நீளத்துக்குமேல் அதை நீட்டமுடியும். வேண்டியபடி யெல்லாம் அதை வளைக்கவும் திருப்பவும் முடியும். உங்களுடைய உள்ளங்கையைப்போல் தட்டையாக்க வேண்டுமானாலும் அதைத் தட்டையாக்கிக் கொள்ள முடியும்; அல்லது உங்கள் சுண்டுவிரலைப் போல் மெல்லியதாகவும் உருண்டையாகவும் செய்து

கொள்ள முடியும். மரக்கிளைகளிலிருந்து என் நாவி னல் ஒவ்வோர் இலையாக மிகவும் எளிதாகப் பறித்துத் தின்பேன். ஆனல் நான் மேயும்பொழுது கொய்யும் இலைகளைக் கடித்து மென்று தின்னுவதில் நேரம் போக்குவது கிடையாது. இலையைப் பறிக்கவேண்டி யது; உடனே விழுங்கவேண்டியது; அவ்வளவுதான்! ஏன் இவ்வளவு அவசரம் என்ரு கேட்கிறீர்கள்? சொல் லுகிறேன்.

ஒட்டகைச்சிவிங்கியின் இனத்துக்குப் பெரும் பகை ஒன்று உண்டு. எது தெரியுமா? சிங்கத்தைத்தான் சொல்லுகிறேன். நாங்கள் நிமிர்ந்து நின்று, தலையை உயர்த்தித் தழை கொய்யும்போது, வெகு தூரத்தில் உள் ளவர்களுக்கும் நாங்கள் இருப்பது தெரியும். அப்படி எங்களைக் கண்டுகொண்டு சிங்கம் எங்களைக் கொல்ல வரும். அதற்காக நாங்கள் எப்பொழுது தழை மேய்ந்தா லும் அவசர அவசரமாக மேய்வோம்; வயிற்றை மட மடவென்று நிரப்பிக்கொள்வோம். பிறகு பத்திரமான ஓரிடத்துக்குச் சென்று, அங்கே பயமில்லாமல் இருந்து கொண்டு, நாங்கள் விழுங்கிய தழைகளை வயிற்றி லிருந்து மீண்டும் வாய்க்குக் கொண்டுவந்து, நன்ருக அசைபோட்டுத் தின்போம். ஆடுமாடுகளைப்போலவே நாங்களும் அசைபோடும் பிராணிகளே.

நாங்கள் வளர்த்தியில் இவ்வளவு பெரிய பிராணி களாயிருந்தபோதிலும் எங்களைப்போல் கோழை மன முடைய பிராணிகள் இல்லையென்றே சொல்லலாம். சண்டைபோடுவதற்கு வேண்டிய ஆயுத உறுப்புக்கள் இருந்தாலல்லவோ தைரியம் வரும்? மற்ற மிருகங்க ளோடு வலியச் சண்டையிடவோ, அல்லது அவை எங்களைத் தாக்கினல் பாதுகாத்துக்கொள்ளவோ கூடிய

திறமை எங்களுக்கு இல்லை. ஆகையால் நான் மேயும் போதெல்லாம் எச்சரிக்கையாகவே இருக்கவேண்டியிருக் கிறது; நாலுபக்கமும் சுற்றிப் பார்த்துக்கொண்டே யிருக்கவேண்டி யிருக்கிறது.

என் கண்கள் இதற்கு ஏற்றபடி அமைந்திருக்கின் றன. உங்கள் கண்களைப்போல் அவை குழிகளில் பதிக் கப்படவில்லை. என் முகத்திலிருந்து அவை வெளியே துறுத்திக்கொண்டிருக்கின்றன. நாலு பக்கமும் பார்க்க வேண்டுமானால் தலையைத் திருப்பாமல் உங்களால் பார்க்க முடியாது. ஆனால் எங்களுக்கு அப்படியில்லை; வேண்டிய திசையை நோக்கிக் கண்ணை உருட்டிப் பார்க்கவேண்டியதுதான்.

ஏதாவது அபாயக்குறி தென்பட்டால், நான் அங்கே நிற்கமாட்டேன்; ஒரே ஓட்டமாக ஓடிவிடுவேன். என் கால்கள் நீளமாயிருப்பதால் என்னால் வெகு வேகமாய் ஓடமுடியும்; களைப்படையாமல் வெகு தூரமும் ஓடமுடி யும். ஆபத்துக் காலத்திலே இவ்விதம் உதவும் கால் களைக் குறை சொல்ல எனக்கு மனமில்லை. ஆனால் தண் ணீர் குடிக்கும்போது இவ்வளவு நீளக் கால்களைக் கட வுள் எங்களுக்கு ஏன் படைத்தார் என்று நினைப்பதுண்டு. தண்ணீர் இருக்குமிடம் ஆழமாயிருந்தால் தண்ணீரில் இறங்கிக் குடிப்பது எளிது. ஆனால் தண்ணீர் ஆழ மில்லாவிட்டால், தண்ணீர் குடிப்பது வெகு கஷ்டமாகி விடுகிறது. எங்கள் முன்கால்களை நன்றாய் அகற்றிப் பரப்பி வைத்துக்கொண்டு, மிகவும் கஷ்டப்பட்டுக் குனிந்து, மிகவும் முயன்று கழுத்தை நீட்டித் தண்ணீர் குடிக்கவேண்டியிருக்கிறது. ஒன்றுக்குச் சௌகரியமா யிருந்தால் வேறொன்றுக்குச் சௌகரியமாயிருப்பதில்லை. உலகத்திலே எல்லாமே இப்படித்தான்.

இவ்வளவு சொன்னேனே, என்னுடைய தோலைப் பற்றிச் சொல்ல மறந்துவிட்டேன். என்னுடைய உயரமான உடலையும், விசித்திரமான தோலையும் கொண்டுதான் எனக்கு ஒட்டகைச்சிவிங்கி என்ற பெயர் கிடைத்திருக்கிறது. என் தோல் பழுப்பு நிறமாயும், செங்கல் நிறப் புள்ளிகளை உடையதாயும் இருக்கும். நல்ல வெயில் வேளையில் தோட்டத்துக்குள்ளே கறுப்பும் வெளுப்புமாகப் பூமியில் கட்டமிடும் நிழலிலே நான் நின்றுகொண்டிருந்தால், சிறிது தூரத்துக்கு அப்பாலுள்ளவன் கூட என்னைக் கண்டுபிடிப்பது கஷ்டம். இயற்கை எங்களுக்குச் செய்துள்ள உபகாரங்களில் இதுவும் ஒன்று.

| | | |
|---|---|---|
| இடை இடையே | நானுபக்கம் | மோப்பம் |
| அன்னியோன்னியமாய் | திகில் | அகலமாட்டா |
| விலாப்பக்கம் | தற்காப்பு | ஆயுதங்கள் |
| உறுப்புக்கள் | பதுங்கி | திகைத்து |
| இலக்கு | எத்தனித்தல் | தெய்வவசம் |
| இயற்கை | இனம் | விழுங்கி |
| மென்று | அசைபோட்டு | வலிய |
| வளர்த்தி | எச்சரிக்கை | துறுத்தி |

## கேள்விகள்:

1. ஒட்டகைச்சிவிங்கி தன்னுடைய தாயை வீரத்தாய் என்கிறது. ஏன்?

2. ஒட்டகைச்சிவிங்கிக்கு இந்தப் பெயர் ஏன் இடப்பட்டது தெரியுமா?

3. ஒட்டகைச்சிவிங்கியின் கால்களால் அதற்குள்ள சௌகரியங்கள் எவை? அசௌகரியங்கள் எவை?

4. ஒட்ட்கைச்சிவிங்கியின் நாவைப்பற்றிச் சொல்லு.

5. ஒட்டகைச்சிவிங்கி சிங்கத்தினிடமிருந்து எப்படித் தப்பிற்று?

**இலக்கணம்:**

1. சிங்கம் நின்றது.
2. தாய் அடித்தாள்.
3. நான் பயந்து நின்றேன்.

பயிற்சி: கீழே காட்டியிருக்கும் அட்டவணையைப்போல் ஓர் அட்டவணை வரைந்து, மேற்கண்ட மூன்று வாக்கியங்களிலிருந்தும் அதைப் பூர்த்திசெய்.

| வாக்கியம் | சொல் | திணை | பால் | எண் | இடம் |
|---|---|---|---|---|---|
| முதல் வாக்கியம் | எழுவாய்<br>பயனிலை | | | | |
| இரண்டாவது வாக்கியம் | எழுவாய்<br>பயனிலை | | | | |
| மூன்றாவது வாக்கியம் | எழுவாய்<br>பயனிலை | | | | |

இவற்றுள் ஒவ்வொரு வாக்கியத்திலும் எழுவாயும் பயனிலையும் திணை, பால், எண், இடம் ஆகியவற்றுள் ஒத்திருப்பதைக் கவனி.

* * *

அல்ஹாஸன் ஸ்பேயினில் வாழ்ந்தார்.

'அல்ஹாஸன்' என்பவர் சிறந்த விஞ்ஞானி. அவர் மிக்க மரியாதைக்கு உரியவர். ஆதலால் அல்ஹாஸன் என்னும் சொல் ஒருமையாயிருந்தபோதிலும் அதற்குப் பயனிலையாயுள்ள வாழ்ந்தார் என்னும் சொல் பன்மையாக இருக்கிறது. இவ்வாறு மரியாதையாகப் பேசும்போது ஒருமைப் பெயரைக் குறிப்பதற்குப் பன்மைப் பெயர்ச்சொல்லையும் உபயோகிப்பதுண்டு. 'அவர் மிக்க மரியாதைக்கு உரியவர்' என்னும் வாக்கியத்திலுள்ள அவர் என்னும் பன்மைச் சொல் அல்ஹாஸனைக் குறிப்பதைக் கவனிக்க. இவ்வாறு வழங்குவதற்கு மரியாதைப் பன்மை என்று பெயர்.

# 20. அப்பியாசம்

[கதையையும் பயிற்சியையும் மௌனமாகவும் விரைவாகவும் ஒரேதடவை படி. படித்த பிறகு புஸ்தகத்தை மூடு.]

*　　*　　*　　*

முன்னொரு காலத்தில் தமிழ்நாட்டில் ஓர் அரசன் இருந்தான். அவனுடைய சபையிலே விசுவநாதன் என்று ஒருவன் இருந்தான். பேச்சு, நடை, உடை, பாவனை ஆகிய எல்லாவற்றிலும் அவன் தமிழனாகவே காணப்பட்டான். ஆயினும் அவன் வடநாட்டு அரசன் ஒருவனால் அனுப்பப்பட்ட எதிரியாயிருக்கக்கூடும் என்று மந்திரிகள் நினைத்தார்கள்.

உண்மையை எப்படிக் கண்டுபிடிப்பது என்று ஆலோசனை செய்தார்கள். "ஆபத்து வேளையில், தன்னையறியாமலே, ஒருவன் தன்னுடைய தாய்மொழியில்தான் பேசுவான்" என்றான் ஒரு மந்திரி.

ஒருநாள் விசுவநாதன் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தான். அவனுடைய அறையில் நால்வர் புகுந்து அவனைத் தடிகளால் அடித்தார்கள். திடீரென்று விழித்த அவன் 'மத் மாரோ' என்று கத்தினான்.

விசுவநாதன் தமிழ்நாட்டினனா? அன்னிய நாட்டினனா?

*　　*　　*　　*

பயிற்சி:

1. விசுவநாதன் தமிழ்நாட்டினனா அன்னிய நாட்டினனா என்று எழுது.

2. மேலே சொல்லிய கதைக்கு என்ன தலைப்புக் கொடுக்கலாம்? கீழ்க்கண்டவற்றுள் கதைக்குப் பொருத்தமாய்த் தோன்றும் தலைப்பை எழுது. (i) அன்னிய நாட்டானா? (ii) மந்திரியின் யோசனை. (iii) அடிபட்டவன்.

# 21. கோடைக்கானல் பிரயாணம்



ஒருமுறை கோடைக்காலத்திலே சென்னையில் வெயில் மிகவும் கடுமையாய் இருந்தது. எங்கேயாவது சென்றால்தான் உடம்புக்குச் சௌக்கியமாய் இருக்கும் என்று தோன்றிற்று. உதகமண்டலத்துக்குப் போவதா, பங்களூருக்குப் போவதா, கோடைக்கானலுக்குப் போவதா என்று சீட்டுப்போட்டுப் பார்த்தோம். கோடைக் கானலுக்கே சீட்டு விழுந்தது. ஆகையால் கோடைக் கானலுக்குப் போவதென்று தீர்மானித்தோம்.

கோடைக்கானலிலே நாங்கள் தங்குவதற்கு வேண் டிய ஏற்பாடுகளைச் செய்துகொண்டோம். கம்பளிச் சட்டைகள், கம்பளிப்போர்வைகள் முதலியவற்றை எடுத்து மூட்டை கட்டினோம்.

ஒருநாள் இரவு சென்னையிலுள்ள எழும்பூர் ஸ்டேஷனுக்குச் சென்று, டிக்கட்டு வாங்கி, திருவனந்த புரம் எக்ஸ்பிரஸில் ஏறி உட்கார்ந்தோம். எட்டுமணி சுமாருக்கு ரயில்வண்டி ஸ்டேஷனை விட்டுப் புறப்பட்

டது. செங்கற்பட்டுக்குப் போகும்வரை பேசிக்கொண்டு சென்ருேம். கோடைக்கானலுக்குப் போனபிறகு எதையெல்லாம் பார்க்கவேண்டும், எங்கெல்லாம் போகவேண்டும் என்று யோசித்தோம். அங்கே போனபிறகு பார்த்துக்கொள்ளலாம் என்று முடிவு செய்தோம்.

ரயில்வண்டி பாலாற்றைக் கடக்கும்போது எங்களுக்கு அரைகுறைத் தூக்கம். எங்கள் வண்டி ஸ்ரீரங்கத்தின் அருகே இருமுறை காவிரியைக் கடந்து சென்றதும் எங்களுக்குத் தெரியாது. ரயில்வண்டி திண்டுக்கல் வந்து சேர்ந்ததும்தான் விழித்துக்கொண்டோம். அங்கேயே காப்பி சாப்பிடுவதா, அல்லது கோடைக்கானல் ரோடு ஸ்டேஷனுக்குப் போனபிறகு காப்பி சாப்பிடுவதா என்ற வழக்குத் தீர்வதற்குள் ரயில்வண்டி புறப்பட்டுவிட்டது. காலையில் கோடைக்கானல் ரோடு ஸ்டேஷனை வந்து அடைந்தோம்.

அங்கே இறங்கி, பல் தேய்த்து, முகம் கழுவி, இட்டலியும் காப்பியும் சாப்பிட்டோம். டிக்கட்டு வாங்கிக்கொண்டு பஸ் ஒன்றில் ஏறிக் கோடைக்கானலுக்குப் புறப்பட்டோம்.

கோடைக்கானல் மலை உச்சியில் உள்ள இடம். ரயில்வே ஸ்டேஷனிலிருந்து அதற்குச் சுமார் ஐம்பது மைல் இருக்கும். மலையின் அடிவாரம் ஸ்டேஷனிலிருந்து ஏறக்குறைய சுமார் இருபது மைல் தூரத்தில் உள்ளது. மலை அடிவாரத்திலிருந்து கோடைக்கானல் ஊருக்குச் சுமார் முப்பது மைல் இருக்கும்.

ஸ்டேஷனிலிருந்து மலை அடிவாரம் செல்லும் வரையில் சாதாரணச் சாலையாகத்தான் இருந்தது. இரு பக்கத்திலும் மரங்கள் இருந்தன. அந்தச் சாலை அகன்ற சாலை. அதிலுள்ள செம்மண்ணையும், தூசியையும் கிளப்



கோடைகானல் ஏரி

[படம்: எ. என். சுவார்ட்ஸ்

பிக்கொண்டே எங்கள் பஸ் சென்றது. மற்றச் சாலைகளில் போவது மாதிரியேதான் அப்பொழுது இருந்தது.

மலை அடிவாரத்தில் வந்தவுடன் இவை யாவும் மாறிவிட்டன. மலையின் ஓரத்திலே அதிக அகலம் இல்லாத ரோடு ஒன்று போடப்பட்டிருந்தது. அதன் ஒரு பக்கத்தில் உயர்ந்த மலை; மறுபக்கத்தில் பெரிய பள்ளம். மலையோரத்திலே அந்தப் பாதையானது, குன்றுகளின் ஓரமாக, வளைந்து வளைந்து சென்று, சிற்றோடைகளையும் பள்ளத்தாக்குகளையும் கடந்து, உயரப் பார்த்துச் சென்றுகொண்டே யிருந்தது. அடிவாரத்தில் பாதை தொடங்கும் இடத்திலேயே "இடது பக்கமாகச் செல்லுங்கள். வேகமாகச் செல்லலாகாது" என்ற எச்சரிக்கைகள் காணப்பட்டன.

அதுவரை எளிதாகச் சென்ற எங்கள் மோட்டார் வண்டி அதற்குப் பிறகு கஷ்டப்பட்டு ஏறுவது தெரிந்தது. வண்டியில் ஓர் ஓசையும், இரைச்சலும் ஏற்பட்டன. முதல் ஐந்து மைல்வரையில் மிகவும் கடுமையான ஏற்றம். அங்கே 'டம்டம் பாறை' என்னும் இடத்திலே வண்டியை நிறுத்தினார்கள். எஞ்சினில் சூடு மிகுந்துபோனபடியால், அதை ஆற்றுவதற்கு வேண்டித் தண்ணீரை மாற்றினார்கள். வண்டியும் நாங்களும் சிறிது களைப்பாறினோம்.

அதன்பிறகு, நாங்கள் மீண்டும் வண்டியில் ஏறி உட்கார்ந்துகொண்டோம். வண்டி மேன்மேலும், வளைந்து வளைந்து ஏறிக்கொண்டே போயிற்று. சிற்சில வேளைகளில் ஒரு பள்ளத்தாக்கின் மறுபுறத்தில் உள்ள பாதை எங்கள் கண்ணுக்குத் தெரியும். "அதோ தெரிகிறது நாம் போகவேண்டிய வழி!" என்போம்; அல்லது "அதோ தெரிகிறது நாம் வந்த வழி!" என்போம்.

சிற்சில இடங்களில் மலையிலிருந்து அருவி விழும் காட்சி பார்ப்பதற்கு அழகாய் இருந்தது.

நாலாயிரம் அடி ஏறிய பிறகு சற்றே குளிர்ச்சியாக இருந்தது. அங்குள்ள மரங்களும் செடிகளும் பூமி மட்டத்தில் உள்ளவைகளைப்போல் இராமல் வேறு வகையாய் இருந்தன.

நாங்கள் சென்ற வண்டியின் ஓசையானது எங்கள் காதில் 'ஙொய்' என்று கேட்டுக்கொண்டே இருந்தது. காதில் ஏதோ அடைப்பதுபோலும் இருந்தது. மேன் மேலும் ஏற ஏறக் காப்பிச் செடிகளும், குளிர்நாடுகளில் வளரும் உயரமான மரங்களும் இருபுறமும் தென் பட்டன.

கடைசியாக நடுப்பகல் வேளையில் கோடைக்கானலி னுடைய அழகிய ஏரிக்கரையில் வந்து சேர்ந்தோம். மலைச்சரிவுகளிலே அங்கங்கே கட்டியிருந்த வீடுகளைப் பார்த்தால் அவை மலையிலே ஒட்டவைத்தவைபோல் தோன்றின. வெயிலடிக்கும் அந்த வேளையிலும் சில் என்ற காற்று வீசிக்கொண்டிருந்தது; எங்களுக்குக் குளிர ஆரம்பித்துவிட்டது.

வண்டியை விட்டுக் கீழே இறங்கினோம். "ஆற் றுப் பெருக்கற்று அடிசுடும் அந்நாளும்" தரை சில் என்று குளிர்ந்திருந்தது. எங்கே பார்த்தாலும் பசுமை; செழுமை. அந்தக் காட்சி கண்ணுக்கு மிகவும் அழகாக இருந்தது.

| | | |
|---|---|---|
| கோடைக்காலம் | கம்பளி | சாலை |
| ரோடு | அடிவாரம் | எஞ்சின் |
| பள்ளத்தாக்கு | மலையுச்சி | ஸ்டேஷன் |
| மோட்டார் | ரயில்வண்டி | செழுமை |
| மலைச்சரிவு | பாதை | பசுமை |

## கேள்விகள்:

1. நீ ரயிலிலாவது, பஸ்ஸிலாவது ஏறிச்சென்ற பிரயாணம் ஒன்றைப்பற்றிச் சுருக்கமாக எழுது.

2. மாட்டுவண்டி, குதிரைவண்டி, ரயில், மோட்டார் முதலிய பலவகை வாகனங்களிலே உனக்கு எது விருப்பம்? ஏன்?

3. குளிர்ச்சியான ஊர்கள் சிலவற்றின் பெயர்கள் இந்தப் பாடத்திலே காணப்படுகின்றன. அவற்றை எடுத்து எழுது.

4. 72 ஆம் பக்கத்திலுள்ள படத்தைக் கவனித்துப் பார். அதைப்பற்றி நாலு வாக்கியங்கள் எழுது.

## இலக்கணம்:

I

நாங்கள் முகத்தைக் கழுவினோம்.

இந்த வாக்கியத்தில் உள்ள மூன்று சொற்களின் இலக்கணம் பின்வருமாறு கூறப்படவேண்டும்.

நாங்கள்—பெயர்ச்சொல், பொருட் பெயர், உயர்திணை, பலர்பால், பன்மை, தன்மை, முதல் வேற்றுமை; 'கழுவினோம்' என்பதற்கு எழுவாய்.

முகத்தை—பெயர்ச்சொல், சினைப்பெயர், அஃறிணை, ஒன்றன்பால், ஒருமை, படர்க்கை, இரண்டாம் வேற்றுமை; 'கழுவினோம்' என்ற பயனிலைக்குச் செயப்படு பொருள்.

கழுவினோம் — வினைச்சொல், செய்வினை, முற்றுவினை, இறந்த காலம், உயர்திணை, பலர்பால், பன்மை, தன்மை; 'நாங்கள்' என்னும் எழுவாய்க்குப் பயனிலை.

ஒரு வாக்கியத்திலிருக்கும் பெயர்ச்சொற்களுக்கு வகை, திணை, பால், எண், இடம், வேற்றுமை ஆகியவற்றைக் கூறி, முடிபும் கூறவேண்டும். வினைச்சொற்களுக்கும் இவ்வாறே கூற வேண்டும். ஆனால் வினைச்சொற்களுக்கு வேற்றுமை கிடையாது; காலம் உண்டு.

பயிற்சி: கீழ்க்கண்ட வாக்கியங்களிலுள்ள சொற்களுக்கு இலக்கணம் எழுது:

1. பாதை ஓடைகளைக் கடந்து சென்றது.
2. நீ பாடத்தைப் படித்தாயா?

## II

1. இது நல்ல பாதை.

2. அவன் சால உண்டான்.

முதல் வாக்கியத்தில் உள்ள நல்ல என்னும் சொல் பாதை என்னும் சொல்லின் தன்மையைக் காட்டுகிறது. அதற்கு உரிச்சொல் என்பது பெயர். பாதை என்பது பெயர்ச்சொல் லாதலால் நல்ல என்பது பெயர் உரிச்சொல்.

இரண்டாவது வாக்கியத்தில் உள்ள சால என்னும் சொல் உண்டான் என்னும் சொல்லின் தன்மையைக் குறிக்கிறது. இதுவும் உரிச்சொல்லேயாகும். உண்டான் என்பது வினைச் சொல்லாதலால் சால என்பது வினை உரிச்சொல்.

பயிற்சி: கீழ்க்கண்ட வாக்கியங்களிலுள்ள பெயருரிச்சொல் எது? வினையுரிச்சொற்கள் எவை?

1. ஆலயம் தொழுவது சாலவும் நன்று.
2. அவன் மிகவும் வேகமாய் ஓடினான்.
3. அது மிக்க கொடுமை.

பயிற்சி:

கீழ்க்கண்ட வாக்கியங்களுள் ஒவ்வொன்றையும் இரண்டு தனி வாக்கியங்களாகப் பிரித்து எழுது:

1. கோடைக்கானலுக்குச் சீட்டு விழுந்ததால், கோடைக் கானலுக்குப் போவதென்று தீர்மானித்தோம்.

2. அங்கே இறங்கி, பல்லைத் தேய்த்து, முகம் கழுவி, இட்டலியும் காப்பியும் சாப்பிட்டோம்.

3. எஞ்சினில் சூடு மிகுந்துபோனபடியால், அதை ஆற்று வதற்கு வேண்டித் தண்ணீரை மாற்றினார்கள்.

4. அங்குள்ள மரங்களும் செடிகளும் பூமி மட்டத்தில் உள்ளவைகளைப்போல் இராமல் வேறுவகையாய் இருந்தன.

# 22. தேனீப்படை

பெல்ஜியம் நாடு வளம் மிகுந்த நாடு. அங்கே வாழும் ஜனங்கள் சுறுசுறுப்பும் ஊக்கமும் மிகுந்த வர்க



ளாதலால் அழகாகத் தோட்டங்கள் போட்டும், நல்ல செடிகொடி மரம் முதலியனவற்றை வளர்த்தும், நல்ல பசுக்களை வளர்த்துப் பால் கறந்து வெண்ணெய் முதலிய வற்றை எடுத்தும், தோட்டங்களிலே தேனீக்களை வளர்த்துத் தேனைச் சேகரித்தும், காற்றில் சுழலும் எந்தி

ரங்களிலே மா முதலியவற்றை அரைத்தும் வாழ்ந்து வந்தார்கள். பயனுள்ள செயல்களைச் செய்து நன்றாக வாழும் அந்நாட்டு ஜனங்கள் மன அமைதி உடையவர்களாயும், உடலுறுதி உடையவர்களாயும் இருந்தார்கள். ஆதலால் அவர்கள் எப்பொழுதும் உற்சாகமாகவும், உல்லாசமாகவும் பொழுது போக்கிவந்தார்கள்.

இப்படி இருந்த நாட்டிலே சுமார் இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னே பெரிய மாறுதல் ஒன்று காணப்பட்டது. கடலோரத்திலே மணற் குன்றுகளின்மீது பெரிய ராக்ஷஸனைப்போல் கைகளைச் சுழற்றிக்கொண்டிருந்த காற்ருடி-எந்திரசாலைகள் வேலைசெய்யாமல் உறங்கிக் கிடந்தன. நாட்டுமக்கள் ஒருவரும் அலங்காரமான ஆடைகளை அணிந்து, தெருக்களிலே சென்று, குதூகலமாய்ப் பொழுதுபோக்கவில்லை. கோயில் மணிகள் கணீர், கணீர் என்று அடித்து ஜனங்களைக் கோயிலுக்கு அழைக்கவில்லை. குழந்தைகளின் உற்சாகக் குரல்கள்கூட ஓரிடமும் கேட்கப்படவில்லை. இவற்றுக்குப் பதிலாக வெகு தூரத்துக்கப்பால் சுடப்படும் பீரங்கிகளின் ஓசையும், அணி அணியாக வகுத்த காலாட்படைகள் நடந்து செல்லும் காலடிகளின் ஓசையும், இங்குமங்கும் பாய்ந்து ஊரைக் கலக்கும் குதிரைப்படையின் குளம்புகளின் ஓசையுமே காதிற் கேட்டன. அமைதி நிரம்பிய அந்த நாட்டில் சத்துருக்கள் படையெடுத்து வந்திருந்தார்கள். இவ்வாறு சத்துருக்கள் அந்நாட்டை வென்றுவிட்டபோது அந்நாட்டு மக்கள் யாவரும் அடங்கி ஒடுங்கிக் கிடந்தார்கள்.

இப்பேர்ப்பட்ட நிலையிலும் அந்த நாட்டில் எதிரிகளைச் சிறிதேனும் பொருட்படுத்தாத கூட்டம் ஒன்று

இருந்தது. அது எது என்ருல் தேனீக்கூட்டம்தான். அயல்நாட்டினர் வந்தபோதிலும் தேனீக்கள் வழக்கம் போலப் பூப்பூவாய்ச் சென்று தேனை எடுத்துத் தம்முடைய கூட்டிற் கொண்டுவந்து சேர்த்துக் கொண்டேயிருந்தன.



அழகிய தோட்டத்தின் நடுவே கட்டப்பட்டிருந்த வீடு ஒன்றில் வாழ்ந்துவந்த குடியானவன் ஒருவன் அவசரமாக ஓடிவந்து, "எல்லோரும் வீட்டுக்குள்ளே போங்கள். கதவைத் தாழிட்டுக்கொள்ளுங்கள். எதிரியின் படையைச் சேர்ந்த சில குதிரைவீரர்கள் இந்தப் பக்கமாக வருகிருர்கள். என்ன கெடுதி செய்வார்களோ யார் கண்டார்கள்?" என்ருன்.

உடனே எல்லோருமாக உள்ளே ஓடிப்போய் எல்லா ஜன்னல் கதவுகளையும் அடைத்துக்கொண்டார்கள். குடியானவன் மட்டிலும் சிறிது நேரம் வெளியே நின்ருன். குதிரைவீரர் பத்துப்பேர் வீட்டை நோக்கி வருவதைக் கண்டான். அவர்கள் சற்றே கிட்டவந்தவுடனே அங்கேயிருந்த ஏழெட்டுத் தேனீக்கூடுகளை அப்படியே சாய்த்துவிட்டு, வீட்டுக்குள் ஓடிப்போய்க் கதவைத் தாழிட்டுக்கொண்டான்.

அவன் ஓடுவதைக் கண்டதும் குதிரைப்படை வீரர்கள் வெகு துரிதமாகக் குதிரைகளைச் செலுத்திக் கொண்டு வந்தார்கள். கீழே விழுந்து சிதைவுபட்டுக் கிடந்த தேனீக்கூடுகளைக் குதிரைகள் மிதித்து நசுக்கின. இதே சமயத்தில் அக்கூடுகளிலிருந்து ஆயிரக்கணக்கான தேனீக்கள் சீறிக்கொண்டு வெளியே கிளம்பின.

அவற்றின் சிறகுகளின் ஓசை ஆகாய விமானத்தின் ஓசையைப்போல் இருந்தது.



சினங்கொண்டெழுந்த தேனீக்கள் பக்கத்திலுள்ள குதிரைகளின்மீதும் குதிரை வீரர்களின்மீதும் பறந்து பாய்ந்தன. குதிரைகளின் மூக்கிலும் கண்ணிலும் உடம்பெங்குமே தேனீக்கள் கொட்டத் தொடங்கின. அவை கொட்டியதைப் பொறுக்கமாட்டாக் குதிரைகள் கடிவாளத்துக்கு அடங்காமல் துள்ளிக் குதித்தன. குதிரையின்மேல் உள்ள போர்வீரர்களையும் தேனீக்கள் சும்மாவிடவில்லை. அவர்களை முகத்திலும் கையிலும் கொட்டின. அவர்கள் துப்பாக்கிகளால் தேனீக்களைச் சுட்டுப்பார்த்தார்கள். கத்தியை அவற்றின்மீது வீசிப் பார்த்தார்கள். தேனீப் படையில் நூற்றுக் கணக்கான தேனீக்கள் மாண்டன. ஆனாலும் மற்றத் தேனீக்கள்




ஓடிப்போகாமல் மேன்மேலும் தம்மை நோக்கிப் பறந்து வரக்கண்ட குதிரைப்படை வீரர்கள் தம்முடைய குதிரைகளைத் திருப்பிக்கொண்டு அந்த இடத்தைவிட்டுத் தப்பினால் போதுமென்று ஓடிவிட்டார்கள். குடியானவன் வளர்த்த தேனீக்கள் இவ்வாறு அவனுடைய குடும்பத்தையும் வீட்டையும் அன்று காப்பாற்றின.

| | | |
|---|---|---|
| மணற்குன்று | படையெடுத்தல் | செயலற்று |
| துரிதமாக | சிதைவுபட்டு | சினங்கொண்டு |
| ஆகாயவிமானம் | கொட்டுதல் | கடிவாளம் |

**கேள்விகள்:**

1. பெல்ஜியம் நாட்டு மக்கள் எப்பேர்ப்பட்டவர்கள்?

2. குடியானவனுடைய வீட்டைத் தேனீக்கள் காத்தது எவ்வாறு?

3. இந்தப் பக்கத்திலுள்ள படத்தைப்பற்றி மூன்று வாக்கியங்கள் எழுது.

குதிரைகளுடைய மூக்கிலும் கண்ணிலும் தேனீக்கள் கொட்டின.

இவ்வாக்கியத்திலுள்ள உடைய என்னும் சொல் குதிரை, மூக்கு என்னும் இரண்டு சொற்களுக்கும் இடையே உள்ளது. அவற்றுக்குள்ள தொடர்பை அது காட்டுகிறது. இவ்வகைச் சொல்லுக்கு இடைச்சொல் என்பது பெயர். இவ்வாக்கியத்தில் இரண்டு முறை வரும் உம் என்ற சொல்லும் இடைச்சொல்லே வேற்றுமை உருபுகளும், ஐயோ போன்று இரக்கத்தையும், சீச்சீ போன்று அருவருப்பையும் காட்டும் சொற்களும் இடைச்சொற்களே.

பயிற்சி: கீழ்க்கண்ட வாக்கியங்களிலுள்ள இடைச்சொற்களை எடுத்தெழுது:

1. ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி.

2. ஆகா! பூவினுடைய மணமும் அழகும் எவ்வளவு நன்றாயிருக்கின்றன!

3. வேலா, இராமனைக் கூப்பிடு.

சொற்கள் பெயர்ச்சொல், வினைச்சொல், உரிச்சொல், இடைச்சொல் என நான்கு வகைப்படும்.

பயிற்சி: இந்தப் பாடத்திலிருந்து ஒவ்வொரு வகைச் சொல்லுக்கும் சில உதாரணங்கள் எடுத்து எழுது.

## பயிற்சி:

அறிவு உள்ளவன் என்னும் சொற்றொடர் இரண்டு சொற்களால் அமைந்தது. இதன் பொருளை அறிவாளி என்னும் ஒரே சொல்லால் குறிப்பிடலாம். இதுமாதிரியே தொழில் செய்பவன் = தொழிலாளி; துரோகம் செய்பவன் = துரோகி.

பயிற்சி: கீழ்க்கண்ட சொற்றொடர்களுக்கு ஈடாகவுள்ள தனிச்சொற்களை எழுது.

i. பாவம் செய்பவன்
ii. ஞானம் உடையவன்
iii. கொடை அளிப்பவன்
iv. வீரம் உள்ளவன்

# 23. கட்டுரை எழுதுதல்

## கடியாரம்

கீழ்க்கண்ட கேள்விகளுக்கு விடை சொல்:

I

1. கடியாரத்தின் வட்டத்தில் எத்தனை எண்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன?

2. இந்த எண்கள் எவற்றைக் குறிக்கின்றன?

3. ஒரு எண்ணுக்கும் அடுத்த எண்ணுக்கும் உள்ள தூரம் எத்தனை பங்காகப் பிரிக்கப்பட்டிருக்கிறது?

4. இந்தப் பங்குகளுள் ஒவ்வொன்றும் எதைக் குறிக்கிறது?

5. கடியாரத்தின் வட்டம் மொத்தம் எத்தனை பங்காகப் பிரிக்கப்பட்டிருக்கிறது?

II

1. கடியாரத்திலே சாதாரணமாக எத்தனை முட்கள் இருக்கும்?

2. பெரிய முள் எதைக் காட்டுகிறது?

3. சிறிய முள் எதைக் காட்டுகிறது?

4. சிறிய முள் ஒரு சுற்றுச் சுற்றுவதற்கு எவ்வளவு நேரம் ஆகும்?

5. பெரிய முள் ஒரு சுற்றுச் சுற்றுவதற்கு எவ்வளவு நேரம் ஆகும்?

III

1. ஒரு மணிக்கு மொத்தம் எத்தனை நிமிஷம் உண்டு?

2. சூரியன் இருக்கும் இடத்தைக்கொண்டு மணியையும் நிமிஷத்தையும் கணக்காகச் சொல்ல முடியுமா?

3. கடியாரத்தின் உபயோகம் என்ன?

**பயிற்சி:**

கடியாரத்தைப்பற்றி மூன்று பாராவில் ஒரு கட்டுரை எழுது.

# 24. இக்காலத்து வாகனங்கள்



பல வருஷங்களுக்கு முன்னே ஓரிடத்திலிருந்து தூரத்திலுள்ள மற்றோர் இடத்துக்குப் போகவேண்டு மென்றால் வெகுநாள் பிடிக்கும். பிரயாணம் செய்வதும் வெகு கஷ்டம். இக்காலத்திலோவெனில் வெகு தூரத் துக்கு அப்பாலுள்ள ஊர்களுக்கெல்லாம் மிகவும் துரித மாகவும், மிகவும் சௌகரியமாகவும் பிரயாணம் செய்து வரலாம். இதற்குக் காரணம் என்னவென்றால், இக் காலத்து வாகனங்கள் மிகவும் விரைவாகச் செல்லக் கூடியவையாயிருப்பதும், அவை மிகவும் திருந்திய அமைப்பை உடையனவாயிருப்பதுமே.

சிறிது தூரம் பிரயாணம் செய்யவேண்டியதாயிருந் தால், மோட்டார் பஸ்ஸில் பிரயாணம் செய்வது எளிது, பணச்செலவும் அதிகம் இல்லை. ரயில்வண்டி செல்லாத ஊர்களுக்குத் துரிதமாய்ச் செல்லவேண்டுமானால் இவற் றில் ஏறிச்செல்வதுதான் மேல். தரை மார்க்கமாக

வெகுதூரம் பிரயாணம் செய்யவேண்டியிருந்தால் இவற்றில் பிரயாணம் செய்வதைக்காட்டிலும் ரயில்வண்டியில் ஏறிப் பிரயாணம் செய்வதுதான் சௌகரியம் அதிகம்.

முதல் படத்திலே காட்டியிருப்பது இங்கிலாந்தில் ஓடும் ஒரு ரயில்வண்டித் தொடர். இது வெகு விரைவாக ஓடக்கூடியது; இங்கிலாந்திலுள்ள லண்டனிலிருந்து ஸ்காட்லாந்திலுள்ள க்ளாஸ்கோவுக்கு ஓடுவது. இவ்விரண்டு நகரங்களுக்கும் இடையே உள்ள தூரம் 401 மைல். இவ்வளவு தூரத்தையும் இது ஆறரைமணி நேரத்தில் கடந்துவிடுகிறது. இது மிகவும் விரைவாகப் போகும்போது காற்று இதை அதிகம் தடைசெய்யா வண்ணம் இதன் எஞ்சின் அமைக்கப்பட்டிருக்கிறது.



மிகவும் சௌகரியமாகப் பிரயாணம் செய்வதற்கு வேண்டிய வசதிகளை இந்த ரயில்வண்டியில் அமைத்திருக்கிறார்கள். ரயில்வண்டியிலேயே சமைப்பதற்கும் சமைத்த உணவைப் பிரயாணிகளுக்கு வண்டியிலேயே பரிமாறுவதற்கும் வேண்டிய சௌகரியங்களும் இதில் நன்றாக அமைக்கப்பட்டிருக்கின்றன. ரயில்வண்டியில் காலடியிலே கம்பளங்கள் விரிக்கப்பட்டிருக்கும்; ஜன்னல்களுக்கெல்லாம் அழகிய திரைகள் கட்டியிருக்கும்; ஒவ்வொரு

பிரயாணிக்கும் தனித்தனியே ஒரு மின்சார விளக்கு உண்டு. ஆகையால் வண்டிக்கு வெளியிலே குளிர் எவ்வளவு அதிகம் இருந்தபோதிலும் வண்டியின் உள்ளே கதகதவென்று சௌகரியமாக இருக்கும்.

இரண்டாம்படத்தில்காட்டியிருப்பதுபிரயாணிகள் ஏறும் ரயில்வண்டி, மின்சாரத்தினல் ஓட்டப்படுவது. இது சில பெரிய நகர்களில் உபயோகிக்கப்படுகிறது. இது மணிக்கு 85 மைல் வீதம் ஓடவல்லது.



சமுத்திரத்தைக் கடக்கும் இக்காலத்துக் கப்பல்களில் சில மிகப் பெரியவை. அவற்றை மிதக்கும் நகரங்கள் என்று சொல்லலாம். படத்திலே காட்டியுள்ளது 'க்வீன் மேரி' என்னும் மிகவும் புகழ்பெற்ற கப்பல். இதில் இரண்டாயிரம் பிரயாணிகள் யாத்திரை செய்வதற்குரிய சௌகரியங்கள் அமைந்திருக்கின்றன. கப்பலை ஓட்டுவதற்கும், கப்பலில் உள்ளவர்களுடைய சௌகரியங்கள் முதலியவற்றைக் கவனிப்பதற்குமாக ஆயிரம் வேலையாட்கள் கப்பலில் இருக்கிருர்கள். கப்பலில் ஒரு பெரிய கடை இருக்கிறது; ஒரு புத்தகசாலை இருக்கிறது; குழந்தைகள் விளையாடுவதற்கென்றே தனியிடம் இருக்

கிறது; சினிமா ஒன்றும் இருக்கிறது. இவற்றைத் தவிர, பிரயாணிகள் அனைவரும் ஒன்ருய் உட்கார்ந்து சாப்பிடுவதற்கேற்ற பெரிய சாப்பாட்டறையும், உடற் பயிற்சி செய்யும் அறையும் அதற்குரிய சாதனங்களும், நீந்துவதற்காகச் சிறு குளமும் இவைபோன்ற பிற சௌகரியங்களும் கப்பலில் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆயிரக் கணக்கான மின்சார விளக்குக்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவை யாவற்றுக்கும் வேண்டிய மின்சார சக்தியை உண்டாக்குவதற்கு உரிய எந்திரங்களும் இதிலேயே இருக்கின்றன. பச்சைக் காய்கறிகளும், பல்சுவை உண்டியும், பழங்களும் வேண்டுமளவு இதில் கிடைக்கும். அரண்மனையில் சுகவாழ்வு வாழ்வது போல் இக்கப்பலில் வாழமுடியும். இக்கப்பல் இங்கிலாந்திலிருந்து அமெரிக்காவுக்கு நாலே நாலு நாளில் செல்லுகிறது.



ஆகாயவிமானங்கள் தற்காலத்தில் மிக முற்போக் கடைந்திருக்கின்றன. இவற்றுள் சில பூமிமட்டத்துக்கு மூன்றரைமைல் உயரத்துக்குமேல் கிளம்பி மணிக்குச் சராசரி இருநூற்று நாற்பதுமைல் வீதம் பறந்து செல்கின்றன. ஒவ்வொரு விமானமும் முப்பதுபேரை

ஏற்றிச் செல்லக்கூடியது. பூமி மட்டத்திலிருந்து மூன்றுமைல் உயரத்துக்குமேல் பறந்தால் மிகவும் விரைவாகப் பறக்கமுடியும். ஏனென்றால் அங்கே உள்ள வாயுமண்டலத்தின் அழுத்தம் குறைவு. அதனால் ஊடுருவிப் பறந்துசெல்லும் ஏரோப்லேனுக்குக் காற்றால் அதிகத் தடை ஏற்படுவதில்லை. மேலும் அவ்வளவு உயரத்துக்குமேலே புயற்காற்று வீசுவதில்லை. அங்குள்ள காற்றும் கிட்டத்தட்ட ஒரே வகையான அழுத்தத்தையுடையதாயிருப்பதால் ஏரோப்லேன் அதிகம் குலுங்குவதில்லை.

ஆனால் அவ்வளவு உயரத்தில் காற்றின் அழுத்தம் குறைவாக இருப்பதால் அங்கே மூச்சுவிடுவது கஷ்டமாக இருக்கும். மேலும் அவ்வளவு உயரத்தில் குளிரும் அதிகம். ஆதலால் அங்கு ஆகாயவிமானம் பறக்கும்போது வெளியேயுள்ள காற்றை வேண்டிய அளவு அழுத்தமுறச் செய்வார்கள்; வேண்டுமளவு சூடேறவும் செய்வார்கள். இவ்வாறு சீர்திருத்திய காற்றைத் தக்க எந்திரங்களின் மூலமாக ஏரோப்லேனுக்குள் புகவிடுவார்கள். இதனால் ஏரோப்லேனில் ஏறிச் செல்கிறவர்களுக்கு மூச்சு விடுவதில் சிரமம் இருக்காது; குளிராது. இப்படிப்பட்ட ஏரோப்லேன்களில் உரிய வேளைகளிலெல்லாம் உணவளிக்கவும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

| | | |
|---|---|---|
| வாகனம் | விரைவு | துரிதம் |
| உடற் பயிற்சி | புத்தகசாலை | சாதனம் |
| மின்சார சக்தி | பல்சுவை | மாளிகை |
| அரண்மனை | ஏரோப்லேன் | ஊடுருவி |

**கேள்விகள்:**

1. இந்தப் பாடத்தில் சொல்லியிருக்கும் வாகனங்களின் பெயர்களை எடுத்தெழுது.

2. அவற்றுள் ஏதாவது ஒன்றைப்பற்றிச் சுருக்கமாக எழுது.

3. ஆகாயவிமானத்தில் ஏறி உயரப் பறந்து செல்வதில் உள்ள சௌகரியம் என்ன? அசௌகரியம் என்ன?

## இலக்கணம்:

அஃறிணை. இந்தச் சொல்லிலே 'ஃ' என்ற எழுத்துக்கு ஆய்த எழுத்து என்று பெயர். நீ முன்னால் மூன்றுவகை எழுத்துக்களைப்பற்றிப் படித்திருக்கிறாய் அல்லவா? ஆகவே எழுத்துக்கள் உயிர் எழுத்து, மெய் எழுத்து, உயிர்மெய் எழுத்து, ஆய்த எழுத்து என்று நால்வகைப்படும்.

வேறு எழுத்துக்களின் உதவியில்லாமல் தானே ஒலிக்கும் எழுத்துக்கு உயிரேழுத்து என்பது பெயர். மொத்தம் பன்னிரண்டு உயிரெழுத்துக்கள் உண்டு. அவற்றைச் சொல்லு.

உயிர் எழுத்தின் உதவியில்லாமல் தானே ஒலிக்காதது மெய் எழுத்து. மெய்யெழுத்துக்கள் மொத்தம் பதினெட்டு. அவற்றைச் சொல்லு.

உயிர் எழுத்தும் மெய் எழுத்தும் கூடிப் பிறக்கும் எழுத்துக்கு உயிர்மெய் யெழுத்து என்பது பெயர். பதினெட்டு மெய் யெழுத்தும் பன்னிரண்டு உயிரெழுத்துமாகச் சேர்ந்து, மொத்தம் 216 (18 × 12) உயிர்மெய் யெழுத்துக்கள் உண்டு என்பது உனக்குத் தெரியுமல்லவா?

இவற்றைத் தவிர ஜ், ஸ், ஷ், க்ஷ், ஹ் என்னும் ஐந்து வடமொழி மெய் யெழுத்துக்களும், அவற்றிலிருந்து உண்டாகும் உயிர்மெய் யெழுத்துக்களும் உண்டு.

பயிற்சி: கீழ்க்கண்ட சொற்களிலுள்ள பலவகை எழுத்துக்களின் பெயர்களைச் சொல்.

எருது, ஏரி, இயல்பு, நேற்று, தேர், எஃகு.



## 25. முரசு

1. ஒற்றைக் குடும்பம் தனிலே—பொருள்
 ஓங்க வளர்ப்பவன் தந்தை.
மற்றைக் கருமங்கள் செய்தே—மனை
 வாழ்ந்திடச் செய்பவள் அன்னை.

2. ஏவல்கள் செய்பவர் மக்கள்—இவர்
 யாவரும் ஓர்குலம் அன்றோ?
மேவி அனைவரும் ஒன்றாய்—நல்ல
 வீடு நடத்துதல் கண்டோம்.

3. அன்பென்று கொட்டு முரசே!—மக்கள்
 அத்தனை பேரும் நிகராம்.
இன்பங்கள் யாவும் பெருகும்—இங்கு
 யாவரும் ஒன்றென்று கொண்டால்.

4. உடன்பிறந் தார்களைப் போலே—இவ்
வுலகில் மனிதர் எல்லாரும்.
இடம் பெரிதுண்டு வையத்தில்—இதில்
ஏதுக்குச் சண்டைகள் செய்வீர்?

5. ஒன்றென்று கொட்டு முரசே!—அன்பில்
ஓங்கென்று கொட்டு முரசே!
நன்றென்று கொட்டு முரசே!—இந்த
நானில மாந்தருக் கெல்லாம்.

—பாரதி

முரசு என்பதற்குப் பறை, பேரிகை, டம்மாரம் என்ற பெயர்களும் உண்டு. பலருக்கும் தெரிவிக்கவேண்டிய விஷயங்களை முரசறைந்து தெரிவிப்பது நம் நாட்டு வழக்கம். முரசு அறைந்து செய்தி சொல்லுகிறவனுக்கு முன்காலத்தில் வள்ளுவன் என்று பெயர்.

1. ஒற்றை = ஒரு. மற்றைக் கருமங்கள் = வேறு உள்ள காரியங்கள். மனை = வீடு; இங்கே குடும்பம் என்ற பொருளில் வந்திருக்கிறது. வாழ்ந்திட = வாழுமாறு.

2. ஏவல்கள் = சொல்லப்பட்ட சிறிய வேலைகள். மக்கள் = குழந்தைகள். மனிதர்கள் என்ற பொருளிலும் இப்பதம் வரும். மூன்றுவது பாடலில் மனிதர்கள் என்ற பொருளில் வந்திருக்கிறது. மேவி = பொருந்தி. வீடு = குடும்பக் காரியங்கள்.

3. ஒன்றென்று = (ஒன்று + என்று) = ஒருகுடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்று.

4. வையம் = பூமி. ஏதுக்கு = எதற்காக.

5. ஓங்கென்று = (ஓங்கு + என்று) = சிறப்பு அடைக என்று. நன்றென்று = (நன்று + என்று) = நல்லது என்று. நானிலம் = பூமி. மாந்தர் = மனிதர்.

பயிற்சி: முதலாவது பாட்டின் கருத்தைச் சுருக்கி எழுது.

# 26. காலையும் மாலையும்

காட்சி I.




[காலை சுமார் எட்டுமணிக்குக் கந்தப்பன் ஹாஸ்டல் வாசல்முன் ஜட்காவண்டி ஒன்று வந்து நிற்கிறது. அதில் பன்னிரண்டு வயதுள்ள சாமிநாதன் உட்கார்ந்திருக்கிறான்.]

வண்டிக்காரன்: இதுதான் ஹாஸ்டல், இறங்குங்கள்.

சாமிநாதன்: அதற்குள் வந்துவிட்டோமா? வாடகை ஒரு ரூபாய் கேட்டாயே; ஹாஸ்டல் வெகுதூரம் இருக்கும் என்றல்லவோ நினைத்தேன்.

வண்டிக்காரன்: தூரம் அதிகம்தான். நான் உங்களுக்காகக் குதிரையை விரைவாக ஓட்டிக்கொண்டு வந்தேன். அதனால்தான் சீக்கிரம் வந்துவிட்டோம். இறங்குங்கள்.

[சாமிநாதன் மெதுவாக இறங்கி ஹாஸ்டல் வாயிலில் நின்று சுற்றுமுற்றும் பார்க்கிருன்.]

**சாமிநாதன்:** இங்கே ஒருவரையும் காணுமே. இது தான் கந்தப்பன் ஹாஸ்டலா?

**வண்டிக்காரன்:** எனக்குத் தெரியாதா? சும்மா கேட்கிறீர்களே. இந்தப் பெட்டியைப் பிடியுங்கள்; கீழே இறக்குவோம். [பெட்டியையும் படுக்கையையும் இறக்கி, ஹாஸ்டல் வாசலில் வைக்கிருன்.] கூலி கொடுங்கள். நான் இன்னும் எங்கேயாவது போய்ப் பிழைக்க வேண்டாமா?

**சாமிநாதன்:** பெட்டியையும், படுக்கையையும் வாசலில் வைத்துவிட்டாயே. என்னுடைய அறைக்கு அவற்றை எடுத்துப் போகவேண்டாமா?

**வண்டிக்காரன்:** யாராவது வேலைக்காரர்கள் வருவார்கள். எடுத்துக்கொண்டு போய் வைப்பார்கள். கூலிகொடுங்கள்; நேரமாகிறது. [கூலியை வாங்கிக் கொண்டு போகிருன்.]

காட்சி II.

[காலை அதே சமயம்: அதே இடம். சாமிநாதன் சுற்றுமுற்றும் பார்க்கிருன்.]

**சாமிநாதன்:** [தனக்குள்] என்ன? ஒருவரையும் காணுமே. இது கந்தப்பன் ஹாஸ்டல்தானு? அல்லது வண்டிக்காரன் என்னை வேறு எங்கேயாவது இறக்கி விட்டானு?

[அப்பொழுது, இடுப்பில் காக்கி டிராயர்ஸ் அணிந்து கையில் ஒரு சவுக்கத்தை ஏந்திக்கொண்டு ஒருவன் வாயிற்படி இறங்கி வருகிருன். அவன் உடலில் வியர்வை ஓடுகிறது; அவனுடைய தலைமயிர் சிறிது கலைந்து கிடக்கிறது]

சாமிநாதன்: [தனக்குள்] இதோ யாரோ வருகிறனே. [அவனைப் பார்த்து, சற்றுத் தயக்கத்துடன் உரக்க] இதுதான் கந்தப்பன் ஹாஸ்டலா?

வந்தவன்: [மரியாதையாக] ஆமாம், ஐயா.

சாமிநாதன்: [தைரியமாய்] மேலே அறை காலியிருக்கிறதா?

வந்தவன்: இருக்கிறது.

சாமிநாதன்: [அதிகாரத்துடன்] இந்தப் பெட்டியையும் படுக்கையையும் தூக்கிக்கொண்டுபோய் மாடி அறையில் வை.

வந்தவன்: ஆகா, அப்படியே செய்கிறேன்.

சாமிநாதன்: கூலி என்னவேண்டும்?

வந்தவன்: [பதில் சொல்லாமல், குனிந்து பெட்டியையும் படுக்கையையும் எடுத்துக்கொண்டு மாடிப்படி ஏறு கிறன். சாமிநாதன் பின்தொடர்ந்து ஒய்யாரமாய் நடக்கிறன்.] எந்த அறைக்கு இவற்றைக் கொண்டு போகவேண்டும்?

சாமிநாதன்: ஏதாவது காலி அறையில் வை.

வந்தவன்: மாடிப்படி ஏறினதும் முதலில் உள்ள அறை காலியாயிருக்கிறது. அங்கே வைக்கிறேன். [அறையில் சாமான்கள் வைக்கப்படுகின்றன. சாமானைத் தூக்கி வந்தவனுக்கு என்ன கூலி கொடுப்பதென்று யோசித்துக் கொண்டே சாமிநாதன் தன் பணப்பையிலிருந்து காசை எடுக்கிறன். இதற்குள், வந்தவன் சந்தடிசெய்யாமல் இறங்கிப் போய்விடுகிறன்.]

சாமிநாதன்: [பையிலிருந்து காசை எடுத்து] இந்தா கூலி, வாங்கிக்கொள். [தன் கையை நீட்டுகிறன். எதிரே ஆளைக் காணது.] என்ன இது? விசித்திர

மாயிருக்கிறதே. ஆளைக் காணுமே! அடே கூலி, கூலி....., கூலி.......ஒருவரையும் காணுமே! வண்டிக்காரன் ஒன்றுக்கு நாலுமடங்கு கூலி வாங்கினான். இவன் கூலியே வாங்காமல் போய்விட்டானே, இவன் யார்? ஹாஸ்டல் சம்பளக்காரனா? அல்லது வேறு யாராவதா?

காட்சி III.



[மாலை: கந்தப்பன் ஹாஸ்டல். சாமிநாதன் மாடிப்படியின் அடிப்படியில் காலைவைத்து ஏறுகிறான். அப்பொழுது பட்டுநிஜார், கோட், டை, தொப்பி முதலியவை அணிந்துகொண்டு ஒருவன் மேல்படியிலிருந்து இறங்குகிறான். இறங்குகிறவன் சாமிநாதனைப் பார்த்துப் புன்னகை புரிகிறான்.]

**சாமிநாதன்:** [தனக்குள்] யார் இது? எங்கேயோ பார்த்தவர்மாதிரி இருக்கிறதே. ஆனால் தெரியாதவர்

களோடு வலுவில் பேசினல் நம்மைப்பற்றி என்ன நினைப்பார்கள்? [இரண்டு பேரும் ஒருவரையொருவர் நெருங்குகிருர்கள். நடு மாடிப்படியில், சாமிநாதன் மற்றவனை உற்றுப்பார்த்து, தனக்குள்] யார் இது? தெரியவில்லையே. நன்ருய்த் தெரிந்த முகம்போல இருக்கிறதே. [இதற்குள் மற்றவன் இரண்டு படி இறங்கிவிடுகிருன்]—ஓகோ. இவனு? காலையில் என்னுடைய பெட்டியைத் தூக்கிவைத்த ஆள் அல்லவா இவன்? என்ன இவ்வளவு நேர்த்தியாய்ச் சட்டை போட்டுக்கொண்டிருக்கிருனே. காலையில் கூலியாளைப்போலத் தோன்றினனே. [திரும்பிப் பார்த்தவண்ணமே நிற்கிருன்.]

**கோவிந்தன்:** [மேல் படியிலிருந்து] என்ன சாமிநாதா அப்படிப் பார்க்கிருயே? கழுத்துச் சுளுக்கிக்கொள்ளப்போகிறது. நீ என்ன இப்படி இங்கே நிற்கிருயே. ஏறப் போகிருயா? இறங்கப் போகிருயா? அல்லது இப்படியே கழுத்துக் கோணிய சிலையைப் போல நிற்கப் போகிருயா?

**சாமிநாதன்:** யார்? நீயா? கோவிந்தனு?—அதெல்லாம் கிடக்கட்டும் கோவிந்தா. இப்பொழுது படி இறங்கிப்போனுரே அவர் யார்?

**கோவிந்தன்:** அவரைத் தெரியாதா உனக்கு? அவர் தான் ஸ்ரீ. இரத்தினம்.

**சாமிநாதன்:** யார்? எந்த ஸ்ரீ. இரத்தினம்?

**கோவிந்தன்:** நம்முடைய உபாத்தியாயர் ஸ்ரீ. இரத்தினம் தான். நீ வேறு யாரென்று நினைத்தாய்?

**சாமிநாதன்:** அப்படியா?—அடே கோவிந்தா, ஒரு குற்றம் செய்துவிட்டேனே. என்ன செய்யலாம்?

**கோவிந்தன்:** என்ன தப்புச் செய்தாய்? அவருக்குக் கும்பிடு போடவில்லையா? அதையெல்லாம் அவர் கவனிக்கமாட்டார்.

**சாமிநாதன்:** அதைவிடப் பெரிய தப்பு.

**கோவிந்தன்:** படி ஏறும்போது அவர்மேல் முட்டி ஞயா? அவர் நல்லவர், அவர் அதையும் கவனிக்க மாட்டார்.

**சாமிநாதன்:** அதுவுமில்லை. அதையும்விடப் பெரிய தப்பு. அவர் நல்லவர் என்கிருயே, என்னை மன் னிப்பாரா?

**கோவிந்தன்:** இன்று காலையில்தான் நீ வந்தாய். அதற் குள் என்ன தப்புச் செய்துவிட்டாய்? அவருக்குக் கோபம் வரும்படியாக நீ என்ன செய்திருக்கமுடி யும்? எனக்கு ஒன்றும் தெரியவில்லையே.

**சாமிநாதன்:** நான் சொல்லுகிறேன். அப்புறம் நீயே சொல். நான் காலையில் வந்தேன். சாமானைத் தூக்க ஆள் இல்லை. அவர் படி இறங்கிவந்தார். அவர் நல்ல சட்டை போட்டுக்கொண்டிருக்க வில்லை. கூலி ஆள் என்று நினைத்துச் சாமானை எடுத்துவைக்கச் சொன்னேன்.

**கோவிந்தன்:** அப்புறம்?

**சாமிநாதன்:** கூலியாளைப்போலவே சாமானைத் தூக்கி வைத்தார். கூலிகொடுக்கக் காசு எடுத்தேன். திரும் பிப் பார்த்தபோது அந்த ஆளைக் காணவில்லை. அப்பொழுதே கொஞ்சம் சந்தேகமாயிருந்தது

**கோவிந்தன்:** [சிரிக்கிருன்] பேஷ், பலே!

**சாமிநாதன்:** என்ன நீ சிரிக்கிருயே! உனக்கென்ன? எனக்குக்கவலையாயிருக்கிறது.

**கோவிந்தன்:** நீ கவலைப்படாதே. அவர் நல்லவர்,— மிகவும் நல்லவர். இவ்வளவு நல்லவர் என்று எனக்கு இன்றுதான் தெரியும். உன்னை ஒன்றும் செய்யமாட்டார். படி இறங்கும்போது கோபமா யிருந்தாரா?

**சாமிநாதன்:** இல்லை. சிரித்த முகமாகவே இருந்தார். இருந்தாலும் நான் செய்தது தப்புத்தானே.

**கோவிந்தன்:** நீ அவரை மன்னிப்புக் கேட்டுக்கொள். நிச்சயமாக மன்னிப்பார். பயப்படாதே.

**சாமிநாதன்:** அவ்வளவு நல்லவரா அவர்?

**கோவிந்தன்:** ஆமாம், மிகவும் நல்லவர். வா, விளையாடப்போவோம். [இரண்டுபேரும் சந்தோஷமாகப் போகிறார்கள்.]

(திரை)

**கேள்விகள்:**

1. 95 ஆம் பக்கத்திலுள்ள படத்தைப்பற்றி மூன்று வாக்கியங்கள் எழுது.

2. 92 ஆம் பக்கத்திலுள்ள படத்தைப்பற்றி நான்கு வாக்கியங்கள் எழுது.

3. தனக்கு நிகழ்ந்த இந்தச் சம்பவத்தைப்பற்றிச் சாமிநாதன் தன்னுடைய அண்ணனிடம் சொல்வதுபோல் சொல்லு.

4. இதை ஸ்ரீ. இரத்தினம் வேறொரு உபாத்தியாயரிடம் சொல்வதுபோல் சொல்லு.

# 27. பறவைக் கூடுகள்



சிலவகைப் பறவைகள் மண்ணிலோ மணலிலோ குழி பறித்து முட்டை யிடுகின்றன; ஆனால் பெரும்பான்மையான பறவைகள் கூடுகட்டி வாழ்கின்றன. சிறு பறவைகள் கூடுகட்டுவதற்குப் புல், வைக்கோல், பாசி முதலிய பொருள்களை உபயோகிக்கின்றன. பெரிய பறவைகள் குச்சிகளைக்கொண்டும் சிறிய மரக்கிளைகளைக்கொண்டும் கூடு கட்டுகின்றன. வேறு சில பறவைகள் சிதைந்து துண்டு துண்டாகிய வைக்கோலையும் மண்ணையும் ஒன்ருகப் பிசைந்து கூடுகட்டுகின்றன. கூடுகளின் வெளிப்பக்கம் கரடுமுரடா யிருந்தாலும், அவற்றின் உட்புறம் புல், இறகு முதலியவற்ருல் மெத்தென்று மிருதுவாக இருக்கும்.



மரங்கொத்திக் குருவி வசதிக்கு ஏற்ற மரமாகப் பார்த்து, அதில் தன் உடல் நுழையும் படியாக வட்டவடிவமான தொளை யொன்று இடுகிறது. பிறகு கொஞ்சம் கொஞ்சமாகத் துளைத்துக்கொண்டே சென்று

மரத்தினுள் ஓரடி ஆழம்வரை பொந்தாக்கி விடுகிறது. இதுதான் அதன் கூடு. நல்ல தச்சன் இழைத்துச் செய்ததுபோல் இதன் உட்புறம் வழவழ என்று இருக்கும்.

சேணியப் பறவையின் கூடு மிகவும் விசித்திரமானது. பாம்புகளுக்குச் சிறு பறவைகளின் முட்டைகளைத் தின்பதில் ஆசை அதிகம். அதனால் பாம்பு தன் கூட்டுக்கு வராதிருக்கும் பொருட்டு, இப்பறவையானது மெல்லிய கிளையின் நுனியிலுள்ள இலையைத்





தைத்துத் தொட்டிலைப்போல் செய்கிறது. ஓர் இலை போதுமான அளவுள்ளதாயிருந்தால் அதை மடக்கிப் பைபோலாக்கித் தைக்கிறது; அளவு போதாவிட்டால், இரண்டு இலைகளையோ மூன்று இலைகளையோ ஒன்றாகச் சேர்த்துப் பைபோலாக்கி, ஓரங்களைத் தைத்துவிடுகிறது. இப்பேர்ப்பட்ட பையின் உட்புறத்திலே கூடுகட்டுகிறது.

வேறொருவகைச் சேணியப் பறவை பலவகையான புல் துண்டுகளைக்கொண்டு கூடுகட்டும். இந்தக் கூடு மரக்கிளையின் நுனியிலிருந்து தொங்கிக்கொண்

டிருக்கும். ஆண்பறவை, பெண்பறவை ஆகிய இரண்டு மாகக் கூடுகட்டத் தொடங்குகின்றன. ஆனல் முட்டை யிடவேண்டிய உட்புறத்து அறையைக் கட்டும்போது





பெண் பறவையே கூட்டின் உட்புறத்தில் இருந்து கொண்டு அந்த அறையை நன்ருகவும் மிருதுவாகவும்

கட்டுகிறது. எவ்வளவு பலமாக மழை பெய்தாலும் இந்தக் கூட்டின் உட்புறம் நனைவதில்லை.

ஆப்பிரிக்காவிலே கெட்டியலகுப் பறவை என்ற பறவை வகையொன்று கூட்டம் கூட்டமாகக் கூடி வாழ்கிறது. இப்பறவைகள் ஒன்றுசேர்ந்து ஒரு மரத்தைச் சுற்றிப் புல்லால் ஒரு கூரை வேய்கின்றன. இக் கூரையின் அடியில் தங்கள் கூடுகளைக் கட்டுகின்றன. எவ்வளவு மழை பெய்தாலும் கூடுகள் நனைவதில்லை. ஒவ்வொரு பறவைக் கூட்டின் வாயும் மூன்று அல்லது நாலு அங்குலத்துக்குமேல் அகலமிருப்பதில்லை; ஆனால் கூடுகள் ஒன்றோடொன்று நெருங்கிக் கட்டப்படுவதால் அத்தனை கூடுகளுமாகச் சேர்ந்து ஒரே கூடுபோல் தோன்றுகின்றன. இதைப் 'பறவை மாளிகை' என்று சொன்னால் பொருந்தும். இந்த மாளிகைக்கு உள்ளே போவதற்கென்று தனித்த வழி ஒன்றும் காணப்படுகிறது.

ஆற்றின் கரையோரத்தில் மரங்கள் செழித்து வளர்ந்த சோலை ஒன்று இருந்தது. அங்கே ஆற்று நீருக்குமேல் நீட்டிக்கொண்டிருந்த மரக்கிளை ஒன்றின் நுனியிலே இரண்டு சிறு பறவைகள் கூடுகட்டி வாழ்ந்தன. அந்தக் கூடு கிளையின் நுனியிலிருந்து தொங்கிக் கொண்டிருந்தது. கூட்டுக்குள்ளே குஞ்சுகள் இருந்தன. எங்கேயோ சுற்றிவிட்டுத் தனியாய் வந்த குரங்கு ஒன்று அந்தச் சோலைக்கு வந்து சேர்ந்தது. யாரோ பகைவன் வந்துவிட்டான் என்று பயந்து, அணில்கள் கீச்சிட்டுக் கொண்டு கிளைக்குக் கிளை தாவி ஓடின; பக்ஷிகள் கத்திக் கொண்டு இங்குமங்கும் பறந்தன. ஆனால் அந்த இரண்டு சிறு பறவைகள் மட்டிலும் ஆற்றோரத்திலுள்ள மரக்கிளையின் நுனியில் அச்சமின்றி உட்கார்ந்து கொண்டு, குரங்கு என்ன செய்கிறது என்று கண்கொட்

டாமல் பார்த்துக்கொண்டிருந்தன. அவற்றின் கண்களில் கோபம் சொலித்தது.

இதைக்கண்டு குரங்கு வியப்படைந்து, "என்னைக் கண்டு மற்றவை எல்லாம் பயந்தோடுகின்றன. இந்தச் சிறு பறவைகள் மட்டிலும் இவ்வளவு தைரியமாய் உட்கார்ந்துகொண்டிருக்கின்றன. இவற்றுக்கு என்ன இவ்வளவு துணிவு?" என்று அவற்றை ஏற இறங்கப் பார்த்தது. அப்போது அவற்றின் பக்கத்தில் கூடு தொங்கக் கண்டது. "ஓகோ! அப்படியா செய்தி! இவைகளுடைய கூட்டுக்கு என்னை வரவொட்டாமல் இந்த இரண்டு அற்பப் பறவைகளும் தடுக்கப்போகின்றனவாம். என்ன துணிவு! இவற்றின் கொட்டத்தை அடக்கவேண்டும். என்னிடம் கொஞ்சம் கூட மரியாதை இல்லை, என்னைக் கண்டு பயமும் இல்லை" என்று அந்தக் குரங்கு எண்ணிற்று.

உடனே அந்தக் குரங்கு மரத்தின் கிளைக்குக் கிளை தாவித் தாவிப் பறவைக் கூட்டின் அருகே வந்தது. மரக்கிளை மெல்லியதாக இருந்தபடியால், கூட்டை நெருங்க நெருங்க, அது குரங்கின் கனத்தால் வளைந்து, தண்ணீர் அண்டையில் தாழ்ந்தது. ஆகவே, "கிளை முறிந்துவிடலாகாது, பிடி தவறிவிடலாகாது" என்று வெகு பத்திரமாய்க் குரங்கு நடக்கவேண்டியிருந்ததால், அதன் முழுக்கவனமும் அந்தக் காரியத்திலேயே செல்லவேண்டியதாயிற்று. அப்பொழுது அப்பறவைகளில் ஒன்று பறந்து வெகு வேகமாகக் குரங்கின் காலில் மோதிற்று. குரங்குக்குக் கால் தவறிற்று. அப்பொழுது வேறொரு கிளையைப் பிடித்துக்கொண்டிராவிட்டால் அது நிச்சயமாக ஆற்றில் விழுந்திருக்கும். அது பிடித்த கிளை வளையவே, அது ஆற்றுத் தண்ணீரில்

சற்றே நனைந்தது. என்ன நடக்கிறது என்று குரங்கு உணருமுன், அந்தப் பறவை அதை மீண்டும் தாக்கி, அதன் கண்ணில் கொத்திற்று. கண்ணில் ஊசியைச் செருகியதுபோல் இருந்தது. நோவு பொறுக்க முடிய வில்லை. ஆதலால் குரங்கு தான் பிடித்துத் தொங்கிய கிளையை விட்டுவிட்டுத் தண்ணீரில் குதித்து, ஆற்றில்



நீந்தி மறுகரை சேர்ந்து, அங்கேயும் நில்லாமல் ஓடிப் போய்விட்டது.

அந்தக் குரங்குக்குக் கண் தெரிவதற்குப் பல மாதங் கள் ஆயின. அதன்பிறகு எந்த மரத்துக் கிளைகளிலிருந்

தாவது பறவைக் கூடுகள் தொங்கிக்கொண்டிருந்தால், அந்த மரத்தின் கிட்ட அந்தக் குரங்கு எட்டிப் பார்ப்பதுகூடக் கிடையாது.

| | | |
|---|---|---|
| பறித்து | பெரும்பான்மை | சிதைந்து |
| கரடுமுரடு | வசதி | தொளை |
| பொந்து | இழைத்து | தச்சன் |
| கூரைவேய்தல் | சோலை | கொட்டம் |

## கேள்விகள்:

1. இந்தப் பாடத்தில் வரும் பறவைகளின் பெயர்களை எடுத்தெழுது.

2. சேணியப் பறவையின் கூட்டைப்பற்றிச் சொல்லு.

3. எந்தக் கூடு மிகவும் விந்தையான கூடு என்று உனக்குத் தோன்றுகிறது? ஏன்?

4. சிறு பறவைகள் தங்கள் கூட்டிலுள்ள குஞ்சுகளைக் காத்தது நீ படித்த கதை வேறு எதையேனும் நினைப்பூட்டுகிறதா? அந்தக் கதையைச் சொல்லு.

## இலக்கணம்:

குறுகிய ஓசையை உடைய உயிரெழுத்துக்குக் குற்றெழுத்து அல்லது குறில் என்பது பெயர். அ, இ, உ, எ, ஒ என்னும் ஐந்தும் குற்றெழுத்துக்கள்.

நீண்ட அல்லது நெடிய ஓசையை உடைய உயிரெழுத்துக்கு நெட்டெழுத்து அல்லது நெடில் என்பது பெயர். ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் ஏழும் நெட்டெழுத்துக்கள்.

ஆகவே உயிரெழுத்துக்கள் குற்றெழுத்து, நெட்டெழுத்து என்று இருவகைப்படும்.

வலிய ஓசையை உடைய மெய்யெழுத்துக்கு வல் எழுத்து என்பது பெயர். க், ச், ட், த், ப், ற் ஆகிய ஆறும் வல்லெழுத்துக்கள். இவை வல்லினம் எனப்படும்.

மெல்லிய ஓசையை உடைய மெய்யெழுத்துக்கு மேல் எழுத்து என்பது பெயர். ங், ஞ், ண், ந், ம், ன் என்னும் ஆறும் மெல்லெழுத்துக்கள். இவை மெல்லினம் எனப்படும்.

இவ்விரண்டுக்கும் நடுத்தரமான ஓசையை உடைய மெய் யெழுத்துக்கு இடை எழுத்து என்பது பெயர். ய், ர், ல், வ், ழ், ள் என்னும் ஆறும் இடை யெழுத்துக்கள். இவை இடையினம் எனப்படும்.

பயிற்சி: கீழ்க்கண்ட சொற்களிலுள்ள உயிரெழுத்துக் களில் குறில்கள் எவை? நெடில்கள் எவை? மெய்யெழுத்துக் களில் வல்லினம் எவை? மெல்லினம் எவை? இடையினம் எவை?

கந்தன், பக்கம், எச்சில், ஏர், ஆழ், இவ்வளவு.

* * * *

# 28. பத்திரிகைச் செய்தி

பாரத தேவி: சென்னை: ஹிஜ்ரி 1361 ஷாபான்மீ 3உ: 17–8–42: சித்திரபானுஸு ஆவணிமீ 1உ திங்கட்கிழமை.

## யமுனையில் வெள்ளம்

புது டில்லி, ஆக. 16.

"யமுனை நதியில் வெள்ளம் பிரவாகமாக வந்துகொண் டிருக்கிறது. சுற்றுப்புறங்களிலுள்ள கிராமவாசிகள் தங்கள் கிராமங்களைக் காலி செய்துவருகின்றனர்."

இது சென்னையிலிருந்து வெளிவரும் பாரத தேவி என் னும் பத்திரிகையில் 17–8–42 அன்று வெளிவந்த செய்தி. இந்தச் செய்தியானது ஆகஸ்டு மாதம் 16 ஆம் தேதியன்று புது டில்லியிலிருந்து கிடைத்தது என்பதையும் இதிலே குறிப் பிட்டிருப்பதைக் கவனிக்க.

# 29. கட்டுரை எழுதுதல்

## குதிரை

### I

கீழ்க்கண்ட கேள்விகளுக்கு விடை சொல்:



1. குதிரையின் கழுத்திலுள்ள மயிருக்கு என்ன பெயர்? 2. குதிரையின் வால் எப்படி இருக்கும்? 3. குதிரையின் வால் அதற்கு எப்படி உபயோகப்படுகிறது? 4. குதிரையின் காலிலுள்ள குளம்புகள் பிளவுபட்டிருக்குமா? 5. குளம்புகளால் குதிரைக்கு உண்டாகும் நன்மை என்ன?

### II

1. குதிரை தின்னும் உணவுப்பொருள்கள் எவை?
2. குதிரை மாமிசம் தின்னுமா?

### III

1. குதிரையின்மேல் நீ ஏறிச் சவாரி செய்திருக்கிறாயா?
2. ஜட்காவண்டியில் ஏறியிருக்கிறாயா?
3. இரட்டைக் குதிரைச் சாரட்டைப் பார்த்திருக்கிறாயா?
4. குதிரைப் பந்தயம் பார்த்திருக்கிறாயா?

**பயிற்சி:**

குதிரையின் தோற்றத்தைப்பற்றி ஒரு பாராவும், அதன் உணவைப்பற்றி ஒரு பாராவும், அதன் உபயோகத்தைப்பற்றி ஒரு பாராவும் எழுதவும்.

# 30. உண்மைத் தைரியம்

(முதற் பாகம்)

இங்கிலாந்து கைத்தொழிலிலே சிறந்த நாடு. ஒவ்வொருவகைக்கைத்தொழிலுக்கும் அடிப்படையில் நிலக்கரி அவசியம். நிலக்கரி பூமிக்குள்ளிருந்து தோண்டி எடுக்கப்படவேண்டும். இங்கிலாந்திலே அங்கங்கே எலி வளைகளைப்போல் நிலக்கரிச் சுரங்கங்கள் காணப்படுகின்றன. கிணற்றுக்குள்ளே வாளியை நாம் இறக்குவதைப்போல் மனிதர்களைச் சுரங்கத்துக்குள்ளே இறக்குவார்கள். அவர்கள் அங்கேயுள்ள நிலக்கரியைக் குடைந்து தோண்டி வெளியே எடுப்பார்கள். சுரங்கத்தினுள்ளே ஒரே மையிருட்டாக இருக்கும். மேலிருந்து வெளிச்சம் வருவதற்கு வழியே கிடையாது. அதுவுமன்றி, சுரங்கத்தின் உட்புறத்திலே கன்னங்கரேலென்ற நிலக்கரியும் கரித்தூளும் எங்கும் நிறைந்திருக்கும். சுரங்கவேலை தொடங்கின காலத்தில் கைவிளக்குக்களைச் சுரங்கவேலையாட்கள் கீழே எடுத்துக்கொண்டு போனார்கள். ஆனால் சுரங்கத்தில் கசிந்த ஒருவிதக் காற்றானது விளக்கின் கொழுந்தால் தீப்பற்றிக்கொண்டு, படீரென்று வெடிக்கும் தன்மை உள்ளதாய் இருந்தது. அதன் வெடிப்பினால் உயிர்ச்சேதமும் பொருட்சேதமும் ஏராளமாக விளைந்தன.

இவ்வாறு பலமுறை வெடிப்பு நிகழவே, சுரங்கவேலை மிகவும் அபாயகரமான வேலையாகிவிட்டது. ஆதலால் எவ்வளவு சம்பளம் கொடுத்தாலும் கீழே இறங்கி வேலைசெய்ய ஜனங்கள் பின்வாங்கினார்கள். ஆயினும் சிற்சிலர் தங்களுடைய குடும்ப நிலையை எண்

ணித் தங்கள் உயிரைக்கூடப் பெரிதாக மதியாமல், கீழிறங்கி வேலைசெய்து வந்தார்கள். அவர்கள் சுரங்கத்துக்குள்ளே இறங்கும்பொழுது சாதாரண விளக்குக்களை எடுத்துப்போவதில்லை. ஆயினும் இருட்டில் வேலை செய்ய முடியாதல்லவா? ஆதலால் அவர்கள் சுரங்கத்துக்குள்ளே ஒரு சிறு இரும்புச் சக்கரத்தைச் சுழலச் செய்து, அதன் விளிம்பிலே அவ்வப்போது ஒரு கூழாங்கல்லை அழுத்திப் பிடிப்பார்கள். அதிலிருந்து மினுக்கு மினுக்கென்று தோன்றும் சிறு பொறிகளின் வெளிச்சத்தைக்கொண்டே அரைகுறை இருட்டில் வேலைசெய்வார்கள். இதனால் சுரங்கங்களிலே வேலை செய்வது மிகவும் கஷ்டமாகவே இருந்தது.

அந்தக் காலத்தில் ஹம்ப்ரி டேவி என்னும் விஞ்ஞானி ஒருவர் அந்தப் பிரதேசத்திலே தம் நண்பர் ஒருவருடைய வீட்டிற்கு விருந்தினராக வந்திருந்தார். அப்பொழுது அவருடைய நண்பர்களில் சிலரும், ஹாட்ஸன் என்னும் பாதிரி ஒருவரும் அவரைப் பார்த்து, "சுரங்கங்களிலே விளக்கினால் ஏற்படும் வேட்டு விபத்துக்களை நிறுத்துவதற்கு ஏதாவது வழி கண்டுபிடிக்கலாகாதா?" என்று கேட்டுக்கொண்டார்கள்.



டேவியும் சம்மதிக்கவே, சுரங்கத்தில் கசியும் காற்றினல் ஏற்படும் அபாயங்களைப்பற்றி அவர்கள் விவரமாகச் சொன்னார்கள். அவ்விடங்களிலே இருட்டிலே வேலைசெய்ய முடியாமலிருப்பதையும், சாதாரணமான விளக்கு எடுத்துக்கொண்டு செல்வதினல் சில சமயங்களிலே திடீர் திடீரென்று வெடிப்பு உண்டாவதையும், மின்னலும் பூகம்பமும் ஒன்ருய்ச் சேர்ந்தாற்போலத் தோன்றும் அந்தக் கோர சம்பவங்களின் கொடுமைகளையும் அவர்கள் விரிவாய்ச் சொன்னார்கள்.

அவற்றைக் கேட்டு மனமிளகிய டேவி அந்தக் கொடுமைகளை அகற்றுவதற்கு வேண்டிய வழிகளை ஆராய்ந்தார். பற்பல சோதனைகளை நிகழ்த்தினர். அவற்றின் பயனகப் புதுமாதிரியான விளக்கு ஒன்றை நிருமித்தார். அந்த விளக்கு சாதாரணமான விளக்கைப்போன்றது; ஆனல் அதைச்சுற்றி மெல்லிய வலைக்கம்பியினல் உறையிடப்பட்டிருந்தது. அந்த விளக்கானது பக்கத்திலுள்ள காற்றை வெடிக்கச்செய்யாது என்பதை டேவி ஆராய்ச்சிசெய்து, தெரிந்துகொண்டார். ஆனல் விளக்கின் உட்புறத்திலே திரி கொழுந்துவிட்டு எரிகிறது. அதன் சுவாலையின் வெளிச்சம் வலைக்கம்பியின் இடுக்குக்களின் வழியாக வெளியே தெரிகிறது. அப்படியிருந்தும் சுவாலை வெளியே வராது என்ருர் டேவி. இது கேட்பதற்குக்கூட சரியாய்த் தோன்றவில்லையல்லவா? தீப்பற்றும் காற்று வலைக்கம்பியின் வழியாக உள்ளே போகாதா? விளக்கினுள்ளே புகுந்த காற்றில் தீப்பற்ருதா? பற்றிக்கொண்டு அது வெடிக்குமானல், சுவாலை வெளியே வந்து, வெளியில் உள்ள காற்றும் தீப்பற்ருதா? என்று ஜனங்கள் பயந்தார்கள்.

ஆனால் டேவி, "ஏன் பயப்படுகிறீர்கள்? வெளியி லுள்ள காற்று உள்ளே வரும். வந்த பிறகு, உள்ளே தீப் பற்றினாலும் பற்றும்; ஆயி னும் அதன் சுவாலை வலைக் கம்பிக்கு வெளியே வராது" என்றார். இவ்வாறு அவர் எவ்வளவு தைரியம் சொல்லி யும் ஜனங்களுக்கிருந்த அவ நம்பிக்கையும் பயமும் குறையவில்லை. தீப்பற்றும் காற்று நிறைந்த சுரங்கத்தி னுள்ளே "அந்த விளக்கை எடுத்துக்கொண்டு ஒருவன் போனால், நிச்சயமாக வெடிப்பு உண்டாகி, அவன் இறந்துவிடுவான்" என்றே ஜனங்கள் சொல்லிவந்தார் கள். ஆதலால் ஒருவரும் விளக்கை எடுத்துக்கொண்டு சுரங்கத்தில் இறங்கத் துணி யவில்லை. இவ்வாறு ஜனங் கள் வருந்துகையில் ஹாட் ஸன் என்பவர் மிகவும் துணிகரமான தீரச்செய லைச் செய்யத் துணிந்தார். எல்லாரும் செய்ய அஞ்சும் காரியத்தைப் பொது நன் மையின்பொருட்டுத் தாம் செய்யவேண்டியது அவசியம் என்று அவர் நினைத்தார். அவர் விஞ்ஞானி அல்ல அவர் ஒரு குரு.



1816-ம் வருஷத்தில் ஜனவரி மாதத்திலே ஒரு நாள், டேவி செய்த விளக்கு ஒன்றை ஏற்றிக் கையில் எடுத்துக்கொண்டு அச்சம் உடனிருந்து பின்னிழுக்கக் கருணையும் உணர்ச்சியும் முன்னிழுக்க, அவர் சுரங்கத்தில் இறங்கினுர். குகைபோன்ற அவ்விடத்தில் எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. வெகு தூரத்துக்கப்பால் சுரங்கக்காரன் ஒருவன் இரும்புச் சக்கரப்பொறியின் வெளிச்சத்திலே சுரங்கத்திலே நிலக்கரியைத் தோண்டிக்கொண்டிருந்தான். அவனைத் தவிர வேறு ஒருவரும் இல்லை. பயங்கரமான அந்தகாரம் எங்கும் நிறைந்திருந்தது. அருளற்ற கொடியகாற்று எங்கும் கசிந்து கண்ணுக்குத் தெரியாது பதுங்கிக்கிடந்தது. விளக்கை எடுத்துக் கொண்டு சிறிதுதூரம் மெல்லமெல்ல அடிமேல் அடி வைத்து நடந்தார் ஹாட்ஸன். ஒவ்வொரு கணமும் எங்கே படீர் என்ற வெடிப்பு உண்டாகுமோ என்று நினைக்க நினைக்க, அவருடைய நெஞ்சம் படபடவென்று அடித்துக்கொண்டது. மேன்மேலும் எழும் அச்சத்தை அடக்கி, அமர்த்திக்கொண்டு அவர் நடந்து சென்றுர். வெடிப்பு உண்டாகவில்லை! அப்பொழுதுதான் அவருக்கு டேவியின் ஆராய்ச்சியில் நம்பிக்கை பிறந்தது. இனிமேல் அபாயம் நேரிடாது என்பதை நிச்சயமாகத் தெரிந்துகொண்டார். அதன்பிறகு, சுரங்கக்காரன் ஒருவன் சுரங்கத்திலே தன்னந்தனியாக வேலை செய்து கொண்டிருந்த இடத்தை நோக்கிச் சென்றுர். வேலையில் ஈடுபட்டிருந்த அந்தச் சுரங்கக்காரன் அவர் வருவதை முதலில் பார்க்கவில்லை. பிறகு ஒருநாளுமில்லாத வெளிச்சம் அன்று சுரங்கத்திற்குள்ளே தோன்றவே அவன் தன் தலையை நிமிர்த்திச் சுற்றுமுற்றும் பார்த்தான். விளக்கைக் கையிலேந்திய ஓர் உருவம் தன்னை நோக்கி வருவதைக் கண்டான். உடனே நடுநடுங்கிப்

பயமும் கோபமும் கலந்த குரலில், "அணை அந்த விளக்கை! அணை! அணை!" என்று கத்தினன்.

ஆனல் விளக்கைக் கொண்டுவரும் உருவம் தயங்கவில்லை; நிற்கவில்லை; விளக்கை அணைக்கவும் இல்லை. முன்போலவே அது அவனை நோக்கி வந்துகொண்டேயிருந்தது. அதைக் கண்டு அவன் வாயில் வந்தபடியெல்லாம் வைதான். "அடே முட்டாள்! அங்கேயே நில்! அடே பைத்தியக்காரா! கிட்ட வராதே, போ! போ! அந்தப் பக்கமாகத் திரும்பிப்போ!—அட சனியனே! நான் சொல்லுவது கேட்கவில்லையா? நீ செவிடா? வராதே என்கிறேனே! மடையா போ!" என்று உரக்கக் கூவினன்.

| | | |
|---|---|---|
| கைத்தொழில் | நிலக்கரி | சுரங்கம் |
| மையிருட்டு | கன்னங்கரேல் | கரி |
| கொழுந்து | கூழாங்கல் | பொறி |
| அகற்றுவது | நிருமித்தார் | கோரசம்பவம் |
| பூகம்பம் | சுவாலை | வலைக்கம்பி |
| அவநம்பிக்கை | தீரச்செயல் | துணிகரமான |
| பொது நன்மை | விஞ்ஞானி | பாதிரி |
| அச்சம் | கருணை | உணர்ச்சி |
| அந்தகாரம் | அருளற்ற | கசிந்து |
| அமர்த்தி | ஈடுபட்டிருந்த | தன்னந்தனியாக |

## கேள்விகள்:

1. ஜனங்கள் சுரங்கங்களில் இறங்கி வேலை செய்யப் பயந்தது ஏன்?

2. சுரங்கக்காரருக்கு டேவி இயற்றிய உதவி என்ன?

3. டேவி இயற்றிய விளக்கை எடுத்துக்கொண்டு ஜனங்கள் சுரங்கத்தில் இறங்கத் துணியவில்லை. ஏன்?

## இலக்கணம்:

அவன், இவன், அந்த, இந்த.

இச்சொற்களில் வரும் அ, இ என்னும் எழுத்துக்கள் ஒரு பொருளை அல்லது இடத்தைச் சுட்டிக் காட்டுகின்றன. இவ்வாறு சுட்டிக் காட்டும்பொழுது இவற்றுக்குச் சுட்டெழுத்துக்கள் என்பது பெயர்.

பயிற்சி: கீழ்க்கண்ட சொற்களில் சுட்டெழுத்து வரும் சொற்கள் எவை?:—அரசன், அங்கே, இனிமை, இப்பலகை.

எவன்?, யாது?, எது? யார்?

இச்சொற்களில் முதல் எழுத்தாக உள்ள எ, யா என்னும் இரண்டு எழுத்துக்களும் கேள்வியைக் குறிக்கின்றன. இவ்வாறு இவ்வெழுத்துக்கள் கேள்வியைக் குறித்து வரும்போது இவற்றுக்கு வினா எழுத்துக்கள் என்பது பெயர். எ, யா என்னும் இரண்டு வினா வெழுத்துக்களும் சொல்லின் முதலில்தான் வரும்.

அவனா? அதுவா? அவனோ? அதுவோ?

இச்சொற்களில் கடைசி எழுத்தாக உள்ள ஆ, ஓ என்னும் இரண்டு எழுத்துக்களும் கேள்வியைக் குறிக்கின்றன. இவ்வெழுத்துக்கள் கேள்வியைக் குறித்து வரும்போது இவற்றுக்கு வினாவெழுத்துக்கள் என்பது பெயர். ஆ, ஓ என்னும் இரண்டு வினாவெழுத்துக்களும் சொல்லின் இறுதியில்தான் வரும்.

எது? அவனே?

இச்சொற்களில் உள்ள ஏ என்னும் எழுத்தானது ஏது என்னும் சொல்லின் முதலிலும், அவனே என்னும் சொல்லின் இறுதியிலும் வருகிறது. இரண்டு சொற்களிலும் இது கேள்வியையே குறிக்கிறது. இவ் வினாவெழுத்து சொல்லின் முதலிலும் இறுதியிலும் வரக்கூடியது.

பயிற்சி: கீழ்க்கண்ட சொற்களில் வினாவெழுத்துக்கள் வரும் சொற்கள் எவை?

யானை, யார், எருது, எந்த, அண்ணா, கல்லா, போ, ஏணி, ஏன்.

# 31. உண்மைத் தைரியம்

(இரண்டாம் பாகம்)



ஆனால் இருள் நிரம்பிய குகையிலே சுடர்விட் டெரியும் சிறு விளக்கை ஏந்திய அவ்வுருவம் அவன் சொல்லுவது ஒன்றையும் கவனியாமல், வாயைத்திறந்து பதிலும் சொல்லாமல், அமைதியாக, நிதானமாக அவனைப்பார்த்து வந்துகொண்டே யிருந்தது. பயத்தால் மதிகலங்கிய அந்தச் சுரங்கக்காரனுக்கு அது பேயோ, அல்லது பிசாசோ என்ற பயம்கூட உண்டாயிற்று. "அடே நில்லடா! மனிதனானால் நில்! பிசாசானால் ஓடிப்போ! தெய்வத்தின்மேல் ஆணை!" என்று அவன் கதறினான். அதற்கும் பதில் சொல்லாமல் அவ்வுருவம் வந்துகொண்டே யிருக்கவே, அவன் பின்னும் பயந்து "ஐயோ! உன்னைக் கெஞ்சுகிறேன். நீ யாராயிருந்தாலும் சரி, விளக்கோடு இங்கே வராதே. விளக்கை வைத்து

விட்டாவது வா. உன்னை உயிர்ப்பிச்சை கேட்கிறேன்" என்று கெஞ்சினன்.

அவ்வுருவம் அதற்கும் பதில் சொல்லாமல் மேன் மேலும் வந்துகொண்டே யிருந்தது. சுரங்கக்காரன் முழந்தாள் பணிந்து, கைகளைக் கூப்பித் தன்னுடைய தெய்வத்தை நோக்கி "என்னைக் காப்பாற்றவேண்டும் தெய்வமே! இந்த ஆபத்தில் உன்னைத்தவிர எனக்கு வேறு கதியில்லை. நான் சாக அஞ்சவில்லை. நான் செத்தால் சாகிறேன். அதைப்பற்றிக் கவலையில்லை. ஆனல் வீட்டிலுள்ள என் மனைவியும் குழந்தைகளும் அநாதைகளாகி விடுவார்களே. அவர்களை யார் காப் பாற்றுவார்கள்?" என்று பரிதாபமாகத் தெய்வத்தை நோக்கி மன்ருடினன்.

அபாயம் நிரம்பிய இடத்திலே, பயமின்றி யாதோர் அபாயமும் விளைவிக்காமல், விளக்கை ஏந்திவரும் உரு வமும் அவ்வுருவம் கையில் தாங்கிவரும் விளக்கும் தெய்விகமானவைகளாகவே இருக்கவேண்டுமென்று அவன் எண்ணலானன். மௌனமாய்த் தன்னை எதிர் நோக்கி வரும் உருவத்தையே பார்த்தவண்ணமாய் வாய் திறவாது, மூச்சும் விடாது, திகைத்து நின்றன்.

இவ்வாறு அவனுடைய மனம் பலவகையாகக் குழம்பித் தத்தளித்துக்கொண்டிருக்கையில், விளக்கை ஏந்திய உருவம் அவன் அருகில் வந்துவிட்டது. வரவே, அது பேயுமல்ல, பிசாசுமல்ல, தன்னுடைய ஊரில் வாழ்பவரும் கருணை நிரம்பியவருமாகிய ஹாட் ஸன் என்னும் குரு என்பதை அவன் தெரிந்துகொண் டான். ஹாட்ஸன் ஊரிலுள்ள ஏழைகளுக்கெல்லாம் அன்பர்; ஒருவருக்கும் தீங்கு செய்யாதவர்; எவருக்கும் தீங்கு நினையாதவர்; எல்லாருக்கும் நன்மையே செய்

பவர். தீப்பற்றும் காற்றின் நடுவிலே கொழுந்துவிட்டெரியும் விளக்கும் கையுமாய் அவரைக் கண்டதும் சுரங்கக்காரன் பிரமித்துப் போனான். அபாயம் நிரம்பிய இடத்திலே, அபாயம் விளைவிக்கும் கருவியைக் கையிலேந்தியபோதும், அபாயத்தை உண்டாக்காமல் இருப்பதைக்கண்டு அவன் அடைந்த வியப்புக்கு அளவே இல்லை. "இது என்ன? தேவலோகத்திலிருந்துவந்த விளக்கா? ரக்ஷைபெற்ற தீபமா? அநாதைகளைக் காக்கும் இந்தச் சுடர்விளக்கு எங்கிருந்து வந்தது? தேவர்களே ஏழைகளுக்கு இரங்கி இவ்விளக்கை அருளினார்களா? உன் கிருபையே கிருபை!" என்று அவன் தெய்வத்தைத் துதித்தான்; ஹாட்ஸனையும் வாயாரப் புகழ்ந்தான்.

அதற்கு ஹாட்ஸன் "தெய்வ கிருபையால் இதை இயற்றியவர் டேவி என்னும் விஞ்ஞானி. மனிதனுடைய முயற்சியாலும் தெய்வத்தின் அருளாலும் இது நிருமிக்கப்பட்டது. இனி உங்களுக்குச் சுரங்கங்களில் விளக்கின் நெருப்பினால் அபாயம் ஏற்படாது" என்றார்.

"கடவுள் செயல்!" என்றான் சுரங்கக்காரன்.

"நான் சுரங்கத்துக்குள் இறங்கும்பொழுது கடவுளைப் பிரார்த்தித்து, அபாயம் விளையக்கூடாது என்று வேண்டிக்கொண்டு, பயத்தோடுதான் இறங்கினேன். ஆனால் தீப்பற்றும் காற்று இருக்கும் வழியாகக் கொஞ்ச தூரம் நான் நடந்த பிறகு, இனி ஆபத்து ஒன்றும் விளையாது என்பதைக் கண்டுகொண்டேன். அதன் பிறகு எனக்குப் பயமே இல்லை. அதனால்தான் நீ இருக்கும் இடத்தைப் பார்த்து வந்தேன். இந்த ரக்ஷாதீபத்தினுடைய குணங்களைப்பற்றி நான் ஜனங்களுக்குச் சொல்லப்போகிறேன். அப்போது நீயும் கூடச்சேர்ந்து

இதைப்பற்றிச் சொன்னால் ஜனங்களுக்கு இதன்மேல் நம்பிக்கை அதிகமாக ஏற்படுமென்று நினைத்துத்தான் உன் பக்கமாக வந்தேன். உனக்கு மனக் கவலையும், பெரும் பயமும் சிறிதுநேரம் உண்டாக்கியதற்கு என்னை மன்னிக்கவேண்டும்" என்றார்.

அதற்கு அந்தச் சுரங்கக்காரன் "உமக்கு மனத்தில் சந்தேகமும் பயமும் இருந்தபோதிலும், ஏழைகளாகிய எங்கள் பொருட்டு உம்முடைய உயிரைப் பலிகொடுப்ப தற்குத் தயாராக இருந்து, சுரங்கத்தில் விளக்கோடு இறங்கிய உம்முடைய கருணையே கருணை! தைரியமே தைரியம்!" என்று அவரைக் கொண்டாடினன்.

இந்த விருத்தாந்தம் நாடெங்கும் பரவிற்று. ரக்ஷா தீபத்தின் மகிமையைப்பற்றி எல்லாரும் கேள்விப்பட்டார்கள். பிறகு சுரங்கங்களிலே அதை உபயோகிக்கத் தொடங்கினார்கள். உயிர்ச்சேதம் நீங்கிற்று. தீபத்தை நிருமித்த டேவியை எல்லாரும் வாழ்த்தினார்கள்.

போர்வெறியில் முன்னணியில் பாய்ந்து துணிகரமாக உயிரைக் கொள்ளைகொள்ள முயலும் தீரச்செயலைக் காட்டிலும் அமைதியாய் ஆலோசித்துப் பொது நன்மையின்பொருட்டுத் தம் உயிரைப் பறிகொடுக்கத் துணிந்த ஹாட்ஸன் செய்த செயலைப்போன்ற தீரச்செயலே உண்மையான தீரச்செயல்.

| | | |
|---|---|---|
| உயிர்ப்பிச்சை | சுடரும் | அமைதியாக |
| நிதானமாக | மதி கலங்கிய | அநாதைகள் |
| பரிதாபமாக | மன்றாடினன் | பயமின்றி |
| தெய்விகம் | குழம்பி | தத்தளித்து |
| பிரமித்து | கருவி | ரக்ஷை |
| ரக்ஷா தீபம் | மனக் கவலை | வீ |

## கேள்விகள்:

1. 'உயிர்ப்பிச்சை'—இந்தச் சொல் வேறு ஏதாவது பாடத்தில் வந்திருப்பது நினைவிருக்கிறதா? அந்தக் கதையைச் சொல்.

2. ஹாட்ஸன் சுரங்கக்காரனிடம் மன்னிப்புக் கேட்டது எதற்காக?

3. ஹாட்ஸன் உண்மைத் தைரியசாலி—ஏன்?

4. பொது நன்மையின் பொருட்டுத் தன் உயிரைக் கொடுக்கத் துணிந்தவர் வேறு யாரையேனும் பற்றித் தெரியுமா? தெரியுமானால் சொல்.

## இலக்கணம்:

ஒரு சொல்லின் கடைசி எழுத்தும், அதை அடுத்து வரும் மற்றொரு சொல்லின் முதல் எழுத்தும் ஒன்றாகச் சேர்வதற்குப் புணர்ச்சி என்பது பெயர். இதைச் சந்தி என்றும் சொல்வதுண்டு.

உதாரணம்:

1. பொன் + மணி = பொன்மணி
2. மாலை + வேளை = மாலைவேளை
3. பலா + சுளை = பலாச்சுளை
4. புளி + பழம் = புளியம்பழம்
5. மண் + பானை = மட்பானை
6. என் + தங்கை = என்றங்கை
7. கல் + தரை = கற்றரை
8. மரம் + வேர் = மரவேர்
9. குலம் + நன்மை = குல நன்மை

முதல் இரண்டு உதாரணங்களில் சந்தி சேரும் இரண்டு சொற்களும் மாறுபாடு இல்லாமல் ஒன்றாகச் சேருகின்றன. அவற்றின் இயல்பான வடிவம் சிறிதும் மாறவில்லை. அதனால் இவ்வகையான சந்திக்கு இயல்பு புணர்ச்சி என்பது பெயர்.

மேலே கூறிய உதாரணங்கள் மற்றெல்லாவற்றிலும் சொற்களின் இயல்பான வடிவம் அவை சேரும்போது மாறுபடு

கிறது. மாறுபாட்டை விகாரம் என்றும் சொல்லலாம். இவ்வகையாய்ச் சொற்கள் மாறுபட்டு ஒன்ருகும் சந்திக்கு விகாரப் புணர்ச்சி என்பது பெயர்.

இன்னும் ஒன்றைக் கவனிக்கவேண்டும். மேலேயுள்ள உதாரணங்களுள் மூன்ருவது உதாரணத்தில் ஓர் எழுத்தும், நாலாவது உதாரணத்தில் இரண்டு எழுத்துக்களும் புதிதாகத் தோன்றி யிருக்கின்றன அல்லவா? இவ்வகையான விகாரப் புணர்ச்சிக்குத் தோன்றல் விகாரம் என்பது பெயர்.

ஐந்தாவது உதாரணத்திலும், ஆருவது உதாரணத்திலும், ஏழாவது உதாரணத்திலும், சொற்களில் உள்ள எழுத்துக்கள் வேறு எழுத்துக்களாக மாறுகின்றன. மாறுபாட்டுக்குத் திரிதல் என்றும் ஒரு பெயருண்டு. ஆதலால் இந்த வகைச் சந்திக்குத் திரிதல் விகாரம் என்பது பெயர்.

எட்டாவது உதாரணத்திலும், ஒன்பதாவது உதாரணத்திலும் சந்தி சேரும் சொற்களிலுள்ள எழுத்து ஒன்று விட்டுப் போயிருக்கிறது. இதற்குக் கேடுதல் என்றும் ஒரு பெயர். ஆதலால் இவ்வகைச் சந்திக்குக் கேடுதல் விகாரம் என்று பெயரிட்டிருக்கிருர்கள்.

பயிற்சி: இச்சொற்களிலுள்ள சந்திகளைப் பிரித்து எழுது.

1. வாயைத்திறந்து
2. மற்றைக்கருமங்கள்
3. மதிகலங்கிய
4. வாழ்ந்திடச்செய்பவள்
5. அவ்வுருவம்
6. பிரமித்துப்போனுன்

பயிற்சி: இச்சொற்களைச் சந்தி சேர்:

1. வீட்டில் + உள்ள
2. நன்று + என்று
3. உன்னை + கெஞ்சுகிறேன்
4. பெரிது + உண்டு
5. தத்தளித்து + கொண்டு + இருக்கையில்

# 32. அரசாங்கம்

ஒரு நாட்டை ஆளும் அதிகாரிகளின் தொகுதியே அரசாங்கம் எனப்படும். நாட்டிலுள்ள மக்கள் அனைவரையும் நீதிநெறி தவருதபடி அடக்கி ஆளும் அதிகாரம் அரசாங்கத்துக்கு உண்டு. பக்ஷபாதம் இன்றியும், அச்சமின்றியும், திறமையுடனும், அறிவுடனும் ஆளும் அரசாங்கமே சிறந்த அரசாங்கம்.

அரசாங்கம் சீரான முறையில் நடத்தப்படாவிட்டால் நாட்டு மக்களுக்குப் பலவிதமான கஷ்டங்கள் உண்டாகும். வலியற்றவர்களும் ஏழைகளும் பல துன்பங்களுக்கு உள்ளாவார்கள். வலியாரின் கை ஓங்கும்; தீயார் தம் இஷ்டம்போலெல்லாம் துணிந்து தீங்கு செய்வார்கள். ஆதலால் ஒவ்வொரு நாட்டிலும் சீரும் சிறப்பும் வளரவேண்டுமானல் அரசாங்கம் நல்ல முறையில் நடத்தப்படவேண்டும்.

நாட்டில் உள்ளவன் ஒவ்வொருவனும் அரசாங்கத்தில் அதிகாரியாக இருந்து நாட்டை ஆளமுடியாது. ஆதலால் சில நாடுகளில் மக்கள் அனைவருமாகச் சேர்ந்து சிலரைத் தேர்ந்தெடுக்கிருர்கள். இவர்களைக் கொண்டு நாட்டின் அரசாங்கத்தை நடத்திவருகிருர்கள். இவ்வாறு நாட்டுக் குடிகள் எல்லாருமாகத் தேர்ந்தெடுத்து நியமிக்கும் பிரதிநிதிகளைக்கொண்டு நடைபெற்றுவரும் அரசாங்கத்துக்குக் குடியரசு என்று பெயர்.

மற்றெல்லா வகை அரசாங்கங்களைக் காட்டிலும் குடியரசு முறையில் நடத்தப்படும் அரசாங்கமே சிறந்தது என்பது இக்காலத்தில் பெரும்பான்மையோர் கொண்டுள்ள அபிப்பிராயம். குடியரசு நாட்டிலுள்ள ஜனங்கள் தங்கள் இஷ்டம்போல் தகுதியுள்ளோர்யாரை

வேண்டுமானாலும் தேர்ந்தெடுக்கலாம். ஆனால் யோக்கியமானவர்களையும், விஷயம் தெரிந்தவர்களையும் தேர்ந்தெடுத்தாலன்றி அரசாங்கம் சீர்குலைந்துபோகும்.

ஜனங்களின் ஆதரவுபெற்று அரசாங்கத்தை நடத்தும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுகிறவர்கள் தங்களுடைய கடமையை நன்றாக உணர்ந்து தைரியமாகவும், நியாயமாகவும் நடந்துவரவேண்டும். அவ்வாறு செய்யாவிட்டால் அவர்கள் நாட்டைக் கெடுத்தவர்கள் ஆவார்கள்.

ஒவ்வோர் அரசாங்கமும் நடத்தி வரவேண்டிய காரியங்கள் ஐந்து என்று ஒருவாறு சொல்லலாம். நாட்டுப் பாதுகாப்பு, சட்ட நிர்மாணமும் நிர்வாகமும், வியாபாரமும் வாணிபமும், சுகாதாரம், கல்வி—என்பவைதாம் அக்காரியங்கள். இவ்வைந்து வகுப்புகளுக்கும் உரிய சட்டதிட்டங்கள் குடிகள் தேர்ந்தெடுத்த சட்ட சபைகளால் அமைக்கப்படுகின்றன. அச்சபைகளில் கூடியுள்ள பிரதிநிதிகளில் பெரும்பான்மையோர் ஆராய்ந்து ஒப்புக்கொண்டதே சட்டம். பிறகு அனைவரும் இதன்படியே அடங்கி நடந்தாகவேண்டும்.

இப்பொழுது உலகம் உள்ள நிலையில், ஒவ்வொரு நாடும் பிறர் படையெடுப்புக்கு அஞ்சாது, தற்காத்துக் கொண்டு வாழவேண்டுமானால் அதற்குச் சேனையும், கப்பற்படையும், விமானப்படையும் அவசியம். இராணுவ பலம் இல்லாத நாடுகள் தம்முடைய சுதந்தரத்தை இழந்து பிறருக்கு அடிமையாகிவிட நேரும்.

ஜனங்களுக்குள் உண்டாகும் வழக்குக்களைத் தீர்ப்பதற்குக் கோர்ட்டுகள் வேண்டும். அவ்வழக்குக்கள் நியாயமாகவும் ஒழுங்காகவும் தீர்க்கப்படவேண்டும். இவற்றுக்கு ஏற்ற சட்டங்கள் வேண்டும். உண்மையான நீதி

பதிகள் வேண்டும். நாட்டு மக்களின் சுபாவங்களையும், நாட்டு வழக்கங்களையும், நியாயத்தையும் நன்றாக அறிந் தவர்களே நீதிபதிகளாக நியமிக்கப்படவேண்டும். அவர்கள் இடும் கட்டளைகளை நிறைவேற்றுவதற்கும், குற்றங்கள் நிகழாமல் மக்களைப் பாதுகாப்பதற்கும் போலீஸ் வேண்டும். இவர்கள் யாவரும் ஜனங்களின் நன்மையை நாடி உழைக்கவேண்டியவர்கள் என்பதை உணரவேண்டும்.

விவசாயம், கைத்தொழில், வியாபாரம் ஆகியவற் ருல் நாட்டின் வளம் பெருகுகிறது. அதைச் சீராக அறிந்து போற்றிவரவேண்டும். அப்பொழுது மக்க ளின் செல்வம் பெருகும்; வறுமை குறையும்.

“நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்”; ஆத லால் ஜனங்கள் நோயின்றி இருப்பதற்குரிய செயல்கள் யாவும் நடத்தப்படவேண்டும். ஊர்களிலுள்ள அசுத் தங்கள் யாவற்றையும் அப்புறப்படுத்தவேண்டும். நல்ல வைத்தியசாலைகளை அமைத்து, அவற்றில் நல்ல வைத்தி யர்களை நியமிக்கவேண்டும். ஔஷதத்தைப்போலவே அன்பும் நோய் தீர்க்கும் என்பதை இவ்வைத்தியர்கள் உணர்ந்தவர்களாக இருக்கவேண்டும்.

நாட்டின் மக்கள் கற்றவர்களாயிருந்தாலன்றி அவர் கள் எந்த விஷயத்தையும் சீராக அறிந்துகொள்ள இய லாது. ஆதலால் நாட்டிலுள்ள அனைவரும் கல்வி கற்பதற்குரிய முயற்சிகள் யாவும் அரசாங்கத்தால் செய் யப்படவேண்டும்.

இவ்வளவையும் செய்து, ஜனங்களுக்கு வேண்டிய போக்குவரவுச் சாதனங்கள், நீர் வசதிகள், மின்சார வசதிகள் முதலியவற்றையும் செய்துகொடுக்கப் பணம் வேண்டும் அல்லவா? அதற்காகத்தான் வரிகள் போடு

கிறார்கள். மக்களின் தரம் அறிந்து, அவர்கள் தாங்கக் கூடிய வரிகளைப் போடுவதுதான் சிறந்த முறை.

அரசாங்கம் ஜனங்களின் நன்மையை நாடிச் செய்யும் முயற்சிகள் அனைத்திலும் ஜனங்களும் ஒத்துழைக்க வேண்டும். வீடுகளையும் அவற்றின் அக்கம் பக்கங்களையும் சுத்தமாக வைப்பதும், சட்டங்களுக்கு அடங்கி நடப்பதும், தக்கவர்களைத் தேர்ந்தெடுப்பதும், தம் நலத்தைவிட நாட்டின் பொதுநலமே பெரிதெனமதிப்பதும், வரி செலுத்துவதும் ஜனங்களின் கடமைகள். அச்சமின்றி, ஆண்மையோடும் நீதியோடும் அறிவோடும் நடப்பவர்கள் உள்ள நாடு செழிக்கும்; அந்நாட்டு மக்கள் இன்பமாக வாழ்வார்கள்.

| | | |
|---|---|---|
| அதிகாரி | தொகுதி | அரசாங்கம் |
| பக்ஷபாதம் | வலியற்றவர் | வலியார் |
| தீயார் | தேர்ந்தெடுத்து | பிரதிநிதி |
| குடியரசு | பெரும்பான்மை | சீர்குலைந்து |

**கேள்விகள்:**

1. குடியரசு என்றால் என்ன?
2. அரசாங்கத்தின் முக்கியமான காரியங்கள் எவை?
3. குடிகளின் கடமை என்ன?
4. வரிகளை ஏன் விதிக்கிறார்கள்?

**பயிற்சி:**

கீழ்க்கண்ட சொற்களுக்கு எதிர்ப்பதங்கள் சொல்லு: நல்லார், வலியுடையவர், எளியார், அறியாமை, சீர்கெட்ட, அநியாயம், சுத்தம்.

# 33. அப்பியாசம்

[கதையையும் பயிற்சியையும் கவனமாகவும் மௌனமாகவும் ஒரேதடவை படி. படித்தபிறகு புஸ்தகத்தை மூடு.]

*   *   *   *

நகரத்தில் வாழ்ந்த ஒருவன் மலையில் வாழ்ந்த தன்னுடைய சிநேகிதன் ஒருவனைப் பார்க்கப்போனான். "இங்கே புலிகள் உண்டா? நான் எத்தனையோ புலிகளை முன்னால் வேட்டை ஆடியிருக்கிறேன்!" என்றான். "பக்கத்துக் காட்டில் சில வேளையில் புலி வருவதுண்டு" என்று மலைநாட்டான் சொன்னான். "அப்படியானால் நாளை வேட்டைக்குப் போவோம்" என்றான் பட்டணத்தான்.

மறுநாள் இருவருமாகக் காட்டுக்குச் சென்றார்கள். சிறிது நேரத்தில் மலைநாட்டான் "இதோ பார்! புலித் தடம்! புலி தெற்கேயிருந்து வந்து இப்படி வடக்காகப் போயிருக்கிறது. அது போய்க் கால்மணி நேரம் இருக்கலாம். நாம் இருவரும் அதைத் துரத்திக்கொண்டு போகலாம் வா" என்றான்.

அதற்குப் பட்டணத்தான் "நான் தெற்குப் பக்கமாகப் போய், புலி எங்கிருந்து வந்தது என்று பார்த்து வருகிறேன். நீ வடக்குப் பக்கமாகப் போய், புலி எங்கே போயிருக்கிறது என்று பார்" என்றான்.

உடனே மலைநாட்டான் "உன்னைப்போல் தைரியசாலியை நான் பார்த்ததே கிடையாது" என்று சிரித்தான்.

*   *   *   *

**பயிற்சி:**

இந்தக் கதைக்கு ஏற்ற தலைப்பு என்ன கொடுக்கலாம் என்று யோசித்து எழுது.

# 34. அல்ஹாஸன்

அல்ஹாஸன் என்பவர் கி. பி. பதினோராம் நூற்றாண்டில் ஸ்பெயின் தேசத்தில் வாழ்ந்துவந்த விஞ்



ஞானி. அபு அலி அல்-ஹாஸன் இப்ன் அல் ஹாஸன் என்பது இவருடைய முழுப்பெயர். இவர் பஸ்ஸோராவில் பிறந்தார் என்றும், ஸ்பெயின் தேசத்தில் வாழ்ந்து தம்முடைய ஆராய்ச்சிகளை நடத்தினார் என்றும், எகிப்திலுள்ள கைரோவில் இறந்தார் என்றும் சரித்திரங்கள் கூறுகின்றன. இவர் மகம்மதிய மதத்தினர்.

ஒளியின் தத்துவங்களை இவர் ஆராய்ந்து வந்தார். அவற்றைப் பற்றிச் சில நூல்கள் எழுதியும் இருக்கிறார். இவர் மிகவும் ஊக்கத்தோடு நுண்ணிய விஷயங்களை

யும் நன்ருகக் கவனிக்கும் இயல்பும் அறிவும் உடையவர். தம்முடைய முழு நேரத்தையும் ஆராய்ச்சியில் கழிக்கவேண்டுமென்று இவர் கருதியும், அது முடியாமல் போய்விட்டது; ஏனென்ருல், இவர் ஏழை. தாம் எழுதிய நூல்களுக்குத் தாமே கைப்பிரதிகள் எழுதி, அவற்றை விற்றுக் கிடைக்கும் சொற்ப வருமானத்தைக் கொண்டு சிரமப்பட்டு வாழ்ந்துவந்தார்.

சூரியனும் சந்திரனும் வானத்தில் தலைக்கு நேரே இருக்கும்போது சற்றே சிறிய அளவு உள்ளவைகளாயும், உதிக்கும்போதும் அஸ்தமிக்கும்போதும் சற்றே பெரிய அளவு உள்ளவைகளாயும் நமது கண்ணுக்குத் தோன்றுகின்றன; அல்லவா? இது வெறும் கண்ணல் பார்க்கும்போது தோன்றும் தோற்றமே யொழிய வேறன்று. தக்க கருவிகளால் அவற்றை அளந்து பார்த்தால் உண்மையில் அளவில் வித்தியாசம் இல்லை என்பது தெரிகிறது. இவ்வாறு இவை தோன்றக் காரணம் என்ன? உதயத்தின்போதும் அஸ்தமனத்தின்போதும் இவற்றைப் பூமியிலுள்ள வீடு, மரம், குன்றுகள் முதலியவற்ரேடு நமது கண் நம்மை அறியாமலே ஒப்பிடுகிறது. அப்படி ஒப்பிட்டுப் பார்க்கும்போது, அவற்றைக் காட்டிலும் சூரியனும் சந்திரனும் பெரியவையாய்த் தோன்றுவதால் சூரியனுடைய அளவும் சந்திரனுடைய அளவும் மிகப் பெரியவையாய் இருப்பனவாக நாம் மதிப்பிடுகிரேம். ஆனல் தலைக்குமேல் அவை வரும்போது, அவற்ரேடு ஒப்பிடுவதற்கு வேருென்றும் தெரிவதில்லை. ஆதலால் அப்பொழுது அவற்றின் அளவைக் குறைவாக இருப்பதாகவே மதிக்கிரேம். இதை முதன் முதலில் தெளிவாக வெளியிட்டவர் அல்-ஹாஸன் என்பவரே.

அக்காலத்தார் கொண்டிருந்த மற்ருேர் எண்ணமும் தவறு என்று முதன் முதலில் கூறியவர் இவரே. நாம் எத்தனையோ பொருள்களைப் பார்க்கிருேமே, எப்படிப் பார்க்கிருேம்? நம்முடைய கண்ணிலிருந்து கிரணங்கள் வெளியே செல்கின்றன; அவை பொருள்களின்மீது படுகின்றன, அப்போதுதான் நாம் அவற்றைப் பார்ப்பதாக உணருகிருேம் என்று பழங்காலத்து விஞ்ஞானிகள் நினைத்துவந்தார்கள். இது தவறு என்றும், பொருள்களிலிருந்துவரும் கிரணங்கள் கண்ணில் படுவதால்தான் நாம் அவற்றைப் பார்க்கிருேம் என்றும் முதன் முதலில் சொல்லியவர் அல்-ஹாஸனே.

| | | |
|---|---|---|
| ஆராய்ச்சி | தத்துவம் | நுண்ணிய |
| இயல்பு | கைப்பிரதி | உதயம் |
| அஸ்தமனம் | கிரணங்கள் | வருமானம் |

**கேள்விகள்:**

1. அல்ஹாஸன் பிறந்த இடம் எது? வாழ்ந்த இடம் எது? இறந்த இடம் எது?

2. அல்ஹாஸனுடைய குணங்களைப்பற்றிச் சுருக்கமாக எழுது.

3. பொருள்களை நாம் பார்ப்பது எப்படி என்று அல்ஹாஸன் சொன்னுர்?

* * * *

**பயிற்சி:**

கோடிட்ட இடங்களில் ஏற்ற பதங்களை அமைத்து எழுது:

குடும்பம்

ஒற்றைக் குடும்பந்தனிலே பொருள் ஓங்க வளர்ப்பவன் ——. மற்றைக் கருமங்கள் செய்தே மனை வாழ்ந்திடச் செய்பவள் ——. ஏவல்கள் செய்பவர் ——. இவர் யாவரும் ஓர் —— அன்ருே?

# 35. பத்திரிகைச் செய்தி

பாரத தேவி: ஹிஜ்ரி 1361 ஷாபான்மீ 3ௗ 17—8—42 சித்திரபானுஸ்ரீ ஆவணிமீ 1ௗ திங்கட்கிழமை.

## வெள்ள நிவாரண நிதிக்கு உதவுக

## பிரதமர் அல்லா பக்ஷ் வேண்டுகோள்

“ஸிந்து வெள்ளத்தினால் கோடிக்கணக்கான ரூபாய் பெறுமானமுள்ள சொத்துக்கள் நஷ்டமடைந்திருக்கின்றன. இதனால் ஜனங்களுக்கு ஏற்பட்டுள்ள கஷ்டம் சொல்லத்தரமன்று. இவர்களின் கஷ்டங்களை நிவாரணம் செய்ய ஸிந்து சர்க்கார் தக்க நடவடிக்கைகளை எடுத்திருக்கிறது. இருந்தாலும் பிறநன்கொடையும் அவசியமாக வேண்டியிருக்கிறது. இந்நாடு பூராவும் உள்ளவர்கள் இந்நிதிக்கு உதவவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்” என்று ஸிந்து பிரதமர் கான் பகதூர் அல்லா பக்ஷ் ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார்.

* * * *

## நிருபர் கடிதம்

கல்கத்தாவில் பௌதிக சாஸ்திரப் பேராசிரியராயிருக்கும் டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் நேற்று மாலை சென்னை இராஜதானிக் கலாசாலையில் ‘நக்ஷத்திரங்கள்’ என்னும் விஷயத்தைப்பற்றித் தமிழில் பேசினார். அவர் ஆராய்ச்சி செய்துள்ள அரிய விஷயங்களை அங்குள்ள மாணவர்க்கு எளிதில் விளங்கும்படி தெளிவாக எடுத்துச் சொன்னார்.

விஞ்ஞானி.

பயிற்சி:

மேற்கண்ட செய்திகளைச் சுருக்கமாகச் சொல்.

# 36. கடல்



1. எல்லை அறியாப் பெருங்கடலே—நீதான்
   இரவும் உறங்காயோ கடலே?
   அல்லும் பகலும் அலைகடலே—உனக்(கு)
   அலுப்பும் இலையோ கருங்கடலே?

2. உருண்டு திரண்டு வரும் கடலே—உடைந்(து)
   ஓடிப் போவதேன் கடலே?
   வெருண்டு மதிகெட்டாய் கடலே—பாறை
   விலகிப் போகுமோ கடலே?

—சி. தேசிகவிநாயகம் பிள்ளை

# 37. புலியும் பிராமணனும்




1. மூப்புடைப் புலிதான் ஒன்று
   மூழ்கியோர் ஏரி யின்கீழ்க்
காப்புடன் தருப்பை தன்னைக்
   கையில்வைத் திருக்கும் போது
நாப்புடை மறைவ லாளன்
   நண்ணிஅவ் வழியிற் செல்லக்
கூப்பிடல் செய்தன் னேனைக்
   குறித்தந்தப் புலிதான் கூறும்:

2. "அந்தணா, இந்தக் காப்பை
   அளிப்பன் நீவா" என் றோதச்
சிந்தையில் வேட்கை கூர்ந்து
   செப்புவான் "புலியா ரேநீர்

வெந்துயர்க் கொலைமாந் தர்க்கு
விளைப்பது விட்டுத் தானம்
எந்தநல் வழியிற் செய்வீர்?
எனக்கதைக் கூறும்" என்றான்.

3. புலியது கேட்டு "நானோ
பூசுரா, நகமும் பல்லும்
இலன்; கிழ மானேன்; பாவம்
இழைப்பது விடுத்து நாளும்
பொலிதரு தானஞ் செய்கை
பொருளெனக் கொண்டேன். அஞ்சேல்!
சலமதின் மூழ்கி வந்து
தரும் இதைக் கொடுபோ" என்ன;

4. "நன்(று)"என மறையோன் மூழ்க
நண்ணினன் ஏரி நீரில்
அன்றவன் கால்கள் சேற்றில்
அழுந்திடத் திகைத்து நின்றான்.
சென்றது புலி, "நான் உன்னைச்
சேற்றினின் றெடுப்பேன்" என்னக்
கொன்றது; குருதி தன்னைக்
குடித்ததென் றுரைத்த தன்றே.

[பஞ்சதந்திரம்] —வீரமார்த்தாண்ட தேவர்

**கேள்விகள்:**

இந்தக் கதையைச் சுருக்கமாகச் சொல்லு.

**பயிற்சி:**

இந்தப் பாடத்தில் முதற் பாடலில் உள்ள சந்திகளைப் பிரித்து எழுது.

# 38. கடிதங்கள்

I

விஞ்ஞானப் பிரசுராலயம்

நிர். 10 செட்டித் தெரு,

ஜார்ஜ் டவுன்,

சென்னை.

'சித்ரா',

ஆற்றூர்,

20—6—1942.

ஐயா,

நீங்கள் விஞ்ஞானப் புத்தகம் ஒன்று புதிதாக வெளியிடப்போகிறீர்கள் என்று கேள்விப்பட்டேன். அதை வெளியிட்டாய்விட்டதா? அது வெளிவந்திருந்தால், எனக்கு வி. பி. தபால்மூலம் ஒரு புத்தகம் அனுப்பவும். அது வெளிவராதிருந்தால், எப்போது வெளிவரும் என்பதைத் தெரிவிக்கவும்.

இப்படிக்கு,

உங்கள் உண்மையுள்ள,

இராமன்.

II

'சித்ரா',

ஆற்றூர்,

27—6—1942.

என் பிரியமுள்ள கோபாலா,

போன வாரம் நான் விஞ்ஞானப் பிரசுராலயத்துக்கு ஒரு கடிதம் எழுதினேன். அவர்களிடமிருந்து புத்தகமும் வரவில்லை; கடிதமும் வரவில்லை.

உனக்கு எத்தனையோ வேலைகள் இருக்கும். இருந்தாலும், நீ ஜார்ஜ் டவுன் செட்டித் தெரு 10-ம் இலக்கமிட்ட அவர்களுடைய பிரசுராலயத்துக்குப் போய் என்ன ஆயிற்று என்று கேட்டு எழுது. எனக்கு விஞ்ஞானப் புத்தகங்கள் படிக்கவேண்டுமென்று ஆவலாயிருக்கிறது.

உன் பிரியமுள்ள,

இராமன்.

ஸ்ரீ கோபாலன் அவர்கள்

நிர். 45 புதுத் தெரு,

திருவல்லிக்கேணி,

சென்னை.

பயிற்சி:

1. கீழ்க்கண்ட குறிப்புக்களை வைத்துக்கொண்டு இராமன் எழுதிய கடிதத்துக்குக் கோபாலன் பதில் எழுதுவது போல் எழுதுக.

கோபாலனுடைய விலாசம்

தேதி

பாரா 1. ஒருவாரத் தாமதம்—(காரணம் ஏதாவது சொல்லுக).

பாரா 2. பிரசுராலயத்துக்குப் போதல் — கேட்டல்— அவர்கள் புத்தகம் அனுப்புகிறார்கள் என்று எழுதுதல்.

பாரா 3. இராமனைச் சென்னைக்கு 'வா' என்று அழைத்தல். (ஏதாவது விசேஷம் குறிப்பிடுக).

இராமனுடைய மேல்விலாசத்தை விவரமாய் எழுதுக.

* * * *

2. கீழ்க்கண்ட குறிப்புக்களை வைத்துக்கொண்டு இராமன் கோபாலன் எழுதிய கடிதத்துக்குப் பதில் எழுதுவது போல் எழுதுக.

இராமனுடைய விலாசம்

தேதி

பாரா 1. கோபாலனுடைய கடிதமும், பிரசுராலயத்திலிருந்து புத்தகமும் கிடைத்தல்.—இதற்கு நன்றி கூறல்.

பாரா 2. சென்னைக்கு வரும்படி அழைத்ததற்கு வந்தனம்—எப்பொழுது வருவேன் என்று எழுதுதல்.

பாரா 3. கோபாலனை ஆற்றூருக்குச் சிலநாள் வந்திருக்க வேண்டுமென்று அழைத்தல்.

கோபாலனுடைய மேல்விலாசம்

# 39. நன்னெறி

1. மாசற்ற நெஞ்சுடையார் வன்சொல்இனி தேனையவர்
பேசுற்ற இன்சொற் பிறிதென்க—ஈசற்கு
நல்லோன் எறிசிலையோ, நன்னுதால், ஒண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு?

2. பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவர் பேறும்;—பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடல்நீர் சென்று புயல்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு.

3. உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க;—வெள்ளம்
தடுத்தல் அரிதோ, தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ? விளம்பு.

4. தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர்;—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகில்
நிறையிருளை நீக்கும்மேல் நின்று.

5. இல்லானுக் கன்பிங் கிடம்பொருள் ஏவல்மற்
றெல்லா மிருந்தும்அவற் கென்செய்யும்?—நல்லாய்,
மொழியிலார்க் கேது முதுநூல்? தெரியும்
விழியிலார்க் கேது விளக்கு?

6. இன்சொலால் அன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலால் என்றும் மகிழாதே;—பொன்செய்
அதிர்வளையாய், பொங்கா தழற்கதிரால் தண்ணென்
கதிர் வரவால் பொங்குங் கடல்.

7. முனிவினும் நல்குவர் மூதறிஞர்; உள்ளக்
கனிவினும் நல்கார் கயவர்;—நனி விளைவில்
காயினு மாகுங் கதலிதான்; எட்டிபழுத்
தாயினும் ஆமோ? அறை.

8. அறிவுடையார் அன்றி அதுபெறார் தம்பால்
செறிபழியை யஞ்சார் சிறிதும்;—பிறைநுதால்,
வண்ணஞ்செய் வாள்விழியே அன்றி மறைகுருட்டுக்
கண் அஞ்சுமோஇருளைக் கண்டு?

# 40. நல்வழி

1. ஆற்றுப் பெருக்கற் றடிசுடும் அந்நாளும்அவ்வா
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்;—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ரானாலும்
இல்லையென மாட்டார் இசைந்து.

2. ஒருநாள் உணவைஒழி யென்றால் ஒழியாய்
இருநாளுக் கேல்என்றால் ஏலாய்—ஒருநாளும்
என்னோ வறியாய் இடும்பைகூர் என்வயிறே
உன்னோடு வாழ்தல் அரிது.

3. ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு.

4. ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி அதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்.

5. மரம்பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாரும்அங் கில்லை;—சுரந்தமுதங்
கற்றா தரல்போல் கரவா தளிப்பரேல்
உற்றார் உலகத் தவர்.

6. வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம்; வேழத்தில்
பட்டுருவுங் கோல்பஞ்சிற் பாயாது;—நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும்.

7. கல்லானே யானாலும் கைப்பொருள்ஒன் றுண்டாயின்
எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை
இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்
செல்லா தவன்வாயிற் சொல். [டாள்

# 41. வாழ்க! வாழ்க!!

வாழ்க வாழ்க உலகெலாம்
வாழ்க எங்கள் தேசமும்

வாழ்க எங்கள் தமிழகம்
வாழ்க எங்கள் மனையறம்

வாழ்க மேழிச் செல்வமே
வளர்க நாட்டுக் கைத்தொழில்

வாழ்க எங்கள் வாணிபம்
வாழ்க நல்ல அரசியல்

அன்புகொண்டு அனைவரும்
அச்சமின்றி வாழ்கவே

துன்பமேது மின்றிநம்
துக்கம் யாவும் நீங்கியே

இன்பமான யாவுமெய்தி
இந்த நாட்டில் யாவரும்

தெம்பினோடு தெளிவுபெற்றுத்
தேவர் போற்ற வாழ்குவோம்!

—நாமக்கல் வே. ராமலிங்கம் பிள்ளை

**வினாக்கள்:**

1. உங்கள் தேசம் எது?

2. எவை எவை வாழவேண்டும் என்று கவிஞர் வாழ்த்துகிறார்?

3. இந்த நாட்டில் எல்லாரும் எவ்வாறு வாழவேண்டும் என்று கவி சொல்லுகிறார்?

# 42. பழமொழிகள்

1. அச்சாணி இல்லாத தேர் முச்சாணும் ஓடாது.
2. அணை கடந்த வெள்ளம் அழுதாலும் வராது.
3. ஆனைக்கு ஒரு காலம் பூனைக்கு ஒரு காலம்.
4. இந்தப் பூனை அந்தப் பாலைக் குடிக்குமா?
5. இமைக் குற்றம் கண்ணுக்குத் தெரியாது.
6. உப்பில்லாப் பண்டம் குப்பையிலே.
7. ஊணினால் உறவு, பூணினால் அழகு.
8. ஊதினால் போம், உறிஞ்சினால் வரும்.
9. எரிகிற வீட்டில் பிடுங்கினது இலாபம்.
10. ஏறச் சொன்னால் எருதுக்குக் கோபம், இறங்கச் சொன்னால் நொண்டிக்குக் கோபம்.
11. ஒரு கை தட்டினால் ஓசை எழும்புமா?
12. கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவி பாடும்.
13. கல்வி அழகே அழகு.
14. கட்டிக் கொடுத்த சோறும், கற்றுக் கொடுத்த சொல்லும் எத்தனை நாள்?
15. கழுதைக்குத் தெரியுமா கற்பூர வாசனை?
16. கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைக்கிறது.
17. காணி சோம்பக் கோடி கெடும்.

# 43. செய்யுட்பாடக் குறிப்புக்கள்

## கடல்

1. எல்லை = வரம்பு. அறியா = அறியமுடியாத. அல் = இரவு. அலை கடல் = அலைகிற கடல். அலுப்பு = தளர்ச்சி. கருங்கடல் = நீலநிறமுடைய கடல்.

2. உருண்டு திரண்டு வருவன கடல் அலைகள். வெருண்டு = பயந்து அல்லது மயங்கி. மதி = அறிவு. பாறையில் அலைவந்து மோதி உடைந்து போவதால், இவ்வாறு அறிவுகெட்டு வந்து வீசுகின்றாய் என்று சொல்லுகிறார்.

## புலியும் பிராமணனும்

1. மூப்புடை = (மூப்பு + உடை) = வயதான. மூழ்கி = முழுகி. கீழ் = பக்கம். காப்பு = கையில் அணியும் ஒரு ஆபரணம். தருப்பை = குசைப் புல். நாப்புடை = நாக்கினில்; புடை—ஏழாம் உருபு. வேதம் எழுதப்படாது நாவினலே பரம்பரையாகச் சொல்லப்பட்டு வருவது என்பது கருத்து. மறை வலாளன் = (மறை + வல் + ஆளன்) = வேதத்தில் வல்லவன். நண்ணி = நெருங்கி. அவ்வழி = அப்புலியிருக்கும் வழி. அன்னேனை = அத்தகையவனை (வேதம்வல்ல அந்தப் பிராமணனை). குறித்து = நோக்கி.

2. அந்தண = பிராமண. அந்தணன் என்றபெயர் கூப்பிடுகிறபொழுது அந்தண என்று திரியும். அளிப்பன் = கொடுப்பேன். ஓத = சொல்ல. சிந்தை = மனம். வேட்கை = விருப்பம். கூர்ந்து = அதிகரித்து. அந்தணனுக்கு விருப்பம் அதிகரிக்கக் காரணம் அந்தக் காப்பு பொன்னுல் செய்யப்பட்டிருப்பது. செப்புவான் = சொல்லுவான். வெந்துயர் = (வெம் + துயர்) = கொடிய துன்பம். விளைப்பது = செய்வது. தானம் = கொடை எனக் கதை = (எனக்கு + அதை). கூறுகென்றான் = (கூறுக + என்றான்) = சொல்லுவாய் என்று சொன்னான்.

3. புலியது = (புலி + அது). பூசுரா = பிராமண. அந்தண என்றது போல. இழைப்பது = செய்வது. விடுத்து = விட்டு. நாளும் = தினந்தோறும். பொலிதரு = விளக்கமான. பொருளென = கொள்கை என்று. அஞ்சேல் = பயப்படாதே.

4. சலமதில் = (ஜலம்) தண்ணீரில். கொடுபோ = கொண்டுபோ. நன்று—சம்மதத்தைக் குறிக்கும் ஒரு சொல்; இக்காலத்தில் சொல்லும் சரி, ஆகட்டும் என்பவைகளைப்போல. மறையோன் = பிராமணன். மூழ்க = முழுகுவதற்கு. நண்ணினன் = வந்து சேர்ந்தான். திகைத்து = பிரமித்து

(ஒன்றும் தோன்றுமல்). குருதி = இரத்தம். குடித்ததென்று = (குடித்தது + என்று).

பஞ்சதந்திரம்—ஐந்து உபாயம். இந்த நூல் பல கதைகளைச் சொல்லி நீதியை விளக்குகிறது. கதைகள் ஒன்றுக்கொன்று தொடர்ச்சியாயிருக்கும்.

இப்பாடத்திலிருந்து "கெட்டவர்கள் பேசும் இனிய பேச்சில் நம்பிக்கை வைக்கக்கூடாது" என்பது தெரியவரும். "மாசற்ற நெஞ்சுடையார்" என்ற நன்னெறிப்பாட்டு இந்தக் கருத்தைத் தெரிவிக்கிறது. "பேராசை கொண்டால் பெரிய தீங்கு வரும்" என்பதையும் பிராமணனுடைய சரிதத்திலிருந்து நாம் கற்றுக்கொள்ளலாம்.

## நன்னெறி

நல் + நெறி = நன்னெறி. நெறி = வழி. நல்ல வழிகள் இவையென்று கூறுவதால், இந்நூலுக்கு நன்னெறி என்று பெயர் வந்தது. இந்நூலில் நாற்பது பாடல்கள் உள்ளன. இதனைச் செய்தவர் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் ஆவர்.

1. மாசு = குற்றம். நெஞ்சு = மனம். நெஞ்சு + உடையார் = நெஞ்சுடையார். வன்சொல் = கடுமையான சொல். ஏனையவர் = மற்றவர்; மாசற்றவர் என்று முன்வந்ததால், மாசு அற்ற நெஞ்சு இல்லாதவர் என்று பொருளாகும்; அதாவது, குற்றம் நிறைந்த மனம் உடையவர் என்பதாம். பிறிது = வேறானது, முன்சொன்ன இனிமைக்கு வேறானது; அதாவது, இனிமை இல்லாதது. ஈசன் = சிவபெருமான். நல்லோன் = நல்லவன் (சாக்கியநாயனர்). சிலை = கல். நன்னுதால் = நல்லநெற்றியையுடையபெண்ணே. ஒரு பெண்ணைப்பார்த்துச் சொல்லுவதாக இந்தப் பாட்டு அமைந்திருக்கிறது. ஒண்கரும்பு என்பது ஒண்கருப்பு என வந்தது. ஒண் = விளக்கம் (அழகு). வில்லோன் = வில்லையுடையவன் (மன்மதன்). விருப்பு = விருப்பமானது. மாசற்ற நெஞ்சுடையார் வன்சொல் இனிது, நல்லோன் எறிந்த கல் இனிது, மாசுற்ற நெஞ்சுடையார் இன்சொல் இன்னுது, வில்லோன் எறிந்தமலர் இன்னுது.

2. உதவி = உபகாரம். ஆக்குபவர் = செய்பவர். பேறும் = செல்வமாம். புயல் = மேகம். முகந்து = மொண்டு. பெய்யா = பெய்து. பிறர்க்கு உதவிசெய்யாதவர் செல்வம் கருங்கடலின் நீர். பிறர்க்கு உதவிசெய்பவர் அந்தச் செல்வத்தை நல்வழியில் பயன்படச் செய்வர். புயல் கடல்நீரை நல்ல தண்ணீராக்கி உலகத்துக்குப் பயன்படச் செய்கிறது.

3. உள்ளம் = மனம். கவர்ந்து = கைக்கொண்டு. ஓங்கு = பொங்குகிற. சினம் = கோபம். குணமே குணம் = குணந்தான் நல்ல குணம். என்க = என்று சொல்லுக. வெள்ளம் = கரை புரண்டு வரும் தண்ணீர். அரிதோ =

அருமையானதோ. தடங்கரை = (தடம் + கரை) = விசாலமான கரை. பேர்த்து = உடைத்து. விளம்பு = சொல்வாயாக. இதற்கு எழுவாயாக நீ என்பதை வருவித்துச் சொல்லவேண்டும். வெள்ளத்தைத் தடுத்தல் அருமை, கோபத்தை அடக்குதல் அருமை, கரையைப் பேர்த்துவிடுதல் எளிமை, கோபம் கொள்ளுதல் எளிமை.

4. தங்குறை = (தம் + குறை). தீர்வுள்ளார் = (தீர்வு + உள்ளார்) = தீர்ப்பதை நினையார். உறூஉம் = ஏற்படுகின்ற. வெம்குறை = கொடிய துன்பங்களை. தீர்க்கிற்பார் = தீர்ப்பார். விழுமியோர் = சிறந்தவர்கள். திங்கள் = சந்திரன். கறையிருள் = களங்கமான இருட்டு. மேல் = ஆகாயத்தில். விழுமியோர் தம்குறைதீராது பிறர்குறை தீர்ப்பர். திங்கள் தன்னிடத்தி லுள்ள இருளைப் போக்காது உலகத்து இருளைப் போக்கும்.

5. இல்லானுக்கு அன்பு இங்கு—அன்பு இல்லானுக்கு இங்கு என்று மாற்றுக. இங்கு = இவ்வுலகம். பொருள் = செல்வம். ஏவல் = ஏவிய காரியங்களைச் செய்பவர்; வேலைக்காரர். என்செய்யும் = என்ன பயனைக் கொடுக்கும். நல்லாய் = நற்குணமுடையவளே. நன்னுதால் என்பதுபோல வந்தது. மொழியிலார் = பேசமுடியாதவர்கள்; ஊமைகள். முதுநூல் = பழைய நூல். விழியிலார் = குருடர். விளக்கு = விளக்கினுலுள்ள. பயன் ஏது = என்ன பிரயோசனம். முதுநூல் ஏது, விளக்கு ஏது, என்று கூட்டுக. இவ்வினுக்களுக்கு விடை 'பயன் ஒன்றும் இல்லை' என்பது. அன்பிலானுக்கு இடம் பொருள் ஏவலால் பயனில்லை, ஊமைக்கு முது நூலும், குருடர்க்கு விளக்கும் பயனில்லை.

6. இன்சொல்லால், வன்சொல்லால் என்பது இன்சொலால், வன்சொலால் என்று வந்தது. வன்சொல் = கொடிய வார்த்தை. இருநீர் = பெரிய நீர்; சமுத்திரம். வியன் உலகம் = அகன்ற பூமி. என்றும் = எப்பொழுதும். பொன்செய் அதிர்வளையாய் = பொன்னுல் செய்யப்பட்டு ஒலிக்கின்ற வளையல்களையுடைய பெண்ணே. இது நல்லாய் என்பது போல பெண்பாலைப் பார்த்துக் கூறுவது. அழல்கதிர் = தீப்போலும் கதிர்களையுடைய சூரியன். தண்ணென் கதிர் = குளிர்ச்சியான கிரணங்களையுடைய சந்திரன். இன்சொல்லால் உலகம் மகிழும்; சந்திரன் கிரணத்தால் கடல் பொங்கும். வன்சொல்லால் உலகம் மகிழாது; சூரிய கிரணத்தால் கடல் பொங்காது.

7. மூதறிஞர் = முதிர்ந்த அறிவுடையவர்கள். முனிவினும் = கோபம் கொண்டாலும். நல்குவர் = கொடுப்பர். கனிவு = மகிழ்ச்சி. நல்கார் = கொடுக்கமாட்டார்கள். கயவர் = அற்பகுணம் உடையவர்கள். விளைவில் = (விளைவு + இல்) = விளைவு இல்லாத. கதலி = வாழை. எட்டி = காஞ்சிரங் காய். ஆமோ = பிரயோசனப்படுமோ. அறை = சொல்லு. நீ என்பது எழுவாயாக வருவிக்க. தான் என்பது அசைச்சொல். மூதறிஞர் முனி

வினும் கொடுப்பர், கதலி காயிலும் பயன்படும்; அற்பர் மகிழ்ச்சியாயிருந்தாலும் கொடார், எட்டி பழுத்தாலும் பயன் இல்லை.

8. அன்றி = அல்லாமல். அது பெறூர் = முன் அறிவுடையார் என்று வந்தமையால் அந்த அறிவைப் பெறுதவர் என்று பொருள்படும். தம்பால் = தம்மிடத்தில். செறிபழி = நெருங்கி வருகிற பழி. சிறிதும் = கொஞ்சம் கூட. பிறைநுதால் = பிறைச்சந்திரன் போன்ற நெற்றியையுடைய பெண்ணே. நன்னுதால் என்பதுபோல. வண்ணம் = அழகு. வாள் விழி = ஒளி பொருந்திய கண். மறை = (ஒளி) மறைந்த. அறிவுடையார் பழிக்கு அஞ்சுவர், ஒளியுடைய கண் இருளுக்கு அஞ்சும்; அறிவில்லார் பழிக்கு அஞ்சார், குருட்டுக்கண் இருளுக்கு அஞ்சாது.

## நல்வழி

நல்ல வழிகள் இவையென்று கூறுவது. நன்னெறி என்பதுபோல, இந்நூலிலும் நாற்பது பாடல்கள் தான். இதைச் செய்தவர் ஔவையார் என்னும் பெண்பாலார்.

1. பெருக்கற்று = (பெருக்கு + அற்று) = வெள்ளம் (அதிகமான தண்ணீர்) = நீங்கி. அடி = பாதம். ஊற்று = நீரூற்று. உலகு = இங்கு இது பூமியைக் குறியாமல் பூமியிலுள்ளவர்களைக் குறிக்கிறது. ஊட்டும் = உண்பிக்கும். ஏற்றவர்க்கு = யாசித்தவருக்கு. குடி = வமிசம். நல்கூர்ந்தார் = தரித்திரர். இசைந்து = மனம் ஒத்து. ஆறு நீர்வற்றிய காலத்தும் ஊற்று நீரால் உலகத்தாருக்குப் பயன் கொடுக்கும். நல்ல வம்சத்திற் பிறந்தவர் தரித்திரர்களாயிருந்தாலும் யாசித்தவர்களுக்கு இல்லை என்று சொல்லாது தம்மிடம் உள்ளதைக் கொடுப்பர்.

2. ஒழி = நீக்கு. ஒழியாய் = நீக்கமாட்டாய். ஏல் = ஏற்றுக்கொள். ஏலாய் = ஏற்றுக்கொள்ளமாட்டாய். ஒருநாளும் = ஒரு நாளாவது. என்னோவறியாய் = (என் + நோ + அறியாய்) நோ = துன்பம். இடும்பை = துன்பம். கூர் = நிறைந்த. அரிது = அருமையாயிருக்கிறது.

3. அரசறிய = (அரசு + அறிய) = அரசனுக்குத் தெரியுமாறு. வீற்றிருந்த = வாழ்ந்திருந்த. வாழ்வும் = வாழ்க்கையும். விழுமன்றே = (விழும் + அன்றே) = அழியும் அல்லவா. ஏற்றம் = உயர்வு. உழுது = பயிர்செய்து. வாழ்வதற்கு = (வாழ்வு + அதற்கு) = உழுதுண்டுவாழ்வு ஏற்றம் என்று கூட்டியுரைக்க. அதற்கு = அந்தப் பயிர்செய்து வாழும் வாழ்வுக்கு. ஒப்பு = சமானம். கண்டீர் = முன்னிலையில் வரும் அசைச்சொல். பழுது = கேடு. பணி = தொழில். இங்கே தொழில்செய்து வாழும் வாழ்க்கையைக் குறிக்கிறது. மரத்திற்கு (ஆற்று) வெள்ளத்தாலும், அரசறிய வீற்றிருந்த வாழ்வுக்குப் பகைகொண்ட பேரரசர்களாலும் கேடு வரலாம். உழுது உண்டு வாழும் வாழ்வுக்கு எக்காலத்திலும் கேடு இல்லை. ஆதலால் உழுதுண்டு வாழ்வது சிறந்தது.

4. ஒன்றை = ஒரு பொருளை. ஒழிந்திட்டு = நீங்கி. ஒன்றாகும் = வேறொரு பொருளாகும். அது = முன்நினைத்த பொருள். எய்தும் = அடையும். நினையாதமுன் = நினையாதிருப்பதற்கு முன்பே. ஆளும் = ஆண்டருளும். ஈசன் = கடவுள். நாம் எண்ணியபடி உலகத்தில் எதுவும் நடவாது. எல்லாம் கடவுள் எண்ணியபடியேதான் நடக்கும்.

5. கூவி = கூப்பிட்டு. இரந்தழைப்பார் = (இரந்து + அழைப்பார்). இரந்து = கெஞ்சி. யாரும் = ஒருவரும். சுரந்தமுதம் = (சுரந்து + அமுதம்). அமுதம் = (இங்கே) பால். கற்றா அமுதம் சுரந்துதரல்போல் என்று கூட்டுக. கற்றா = கன்றையுடைய பசு. கரவாது = ஒளிக்காமல். கரவாதளிப்பரேல் = (கரவாது + அளிப்பரேல்). அளிப்பரேல் = கொடுப்பாரானால். உற்றார் = உறவினர். உலகத்தவர் உற்றாராவர் என்று மாற்றிக் கூறுக. மரம் பழுத்தால் வௌவால் அழையாமல் தானே வந்து சேரும். ஒளிக்காமல் தன்னிடம் உள்ளவற்றைப் பிறருக்குக் கொடுப்பவர்களை எல்லோரும் தாமே உறவினராக வந்து அடைவார்கள்.

6. வெட்டெனவை = வலிமையானவை. மெத்தெனவை = மென்மையானவை. வேழம் = யானை. பட்டு = தைத்து. உருவும் = அதன் உடலில் ஊடுருவிச் செல்லுகின்ற. நெட்டிருப்பு = (நெடு + இருப்பு); இரும்பு இருப்பு என்று வந்தது; கரும்பு கருப்பு என்று வந்ததுபோல. பாரை = கடப்பாரை. நெக்குவிடும் = பிளந்துபோம். யானையை ஊடுருவிச் செல்லும் அம்பு மெல்லிய பஞ்சை ஊடுருவிச் செல்லாது. வலிய கடப்பாரைக்குப் பிளக்காத கற்பாறை மென்மையான மரத்தின் வேருக்குப் பிளந்துவிடுகிறது. ஆதலால் வன்மையான சொல் மென்மையான சொல்லை வெல்ல முடியாது. மென்மையான இனிய சொற்கள்தான் வெற்றிபெறும்.

7. கைப்பொருள் ஒன்று = கையில் பொருள் மாத்திரம். சென்றங்கெதிர் கொள்வர் = (சென்று + அங்கு + எதிர்கொள்வர்). எதிர்கொள்வர் = எதிர்கொண்டு உபசரிப்பர். இல்லான் = பொருள் இல்லாதவன் (படிப்பிருந்தாலும்). இல்லாளும் = மனைவியும். வேண்டாள் = விரும்பாள். மற்றீன்றெடுத்த = (மற்று + ஈன்று + எடுத்த). மற்று = அசைச்சொல். ஈன்று = பெற்று. செல்லாதவன் = (செல்லாது + அவன்). அவன் வாயிற்சொல் செல்லாது என்று மாற்றுக. செல்லாது = பயன்படாது. படியாதவனானாலும் பொருளுடையவனை யாவரும் மதிப்பர். படித்திருப்பினும் பொருள் இல்லாதவனை நெருங்கிய மனைவியும், பெற்ற தாயுமே, மதிக்கமாட்டாள் என்றால் அவனை உலகத்தில் ஒருவருமே மதிக்கமாட்டார்கள் என்று தெரிகிறது.



---

PRINTED IN INDIA AT THE DIOCESAN PRESS, MADRAS FOR THE CHRISTIAN LITERATURE SOCIETY FOR INDIA—1949. B 10475.

வாழ்க! வாழ்க!!

நாமக்கல் வே. ராமலிங்கம் பிள்ளை:

இவர் சேலம் ஜில்லாவிலுள்ள நாமக்கல் என்னும் ஊரில் வாழ்ந்து வருகிறார். பலவகையான தேசீயப் பாடல்களையும் வேறு பலவகையான பாடல்களையும் பாடியிருக்கிறார். இவரது பாடல்கள் பல 'தமிழன் இதயம்', 'சங்கொலி', 'பிரார்த்தனி' என்னும் புத்தகங்களாக வெளிவந்துள்ளன. 'அவனும் அவளும்' என்ற காவியம் ஒன்றையும் இவர் செய்யுள் வடிவத்தில் பாடியிருக்கிறார்.

இவர் வசனம் எழுதுவதில் வல்லவர். 'கவிஞன் குரல்' என்பது இவர் எழுதிய வசன நூல் ஒன்றின் பெயர். இவர் சித்திரக்கலையிலும் வல்லவர். சில காலத்துக்குமுன், பொதுமக்களால் இவருக்கு ஒரு பெரு நிதி பரிசாக அளிக்கப்பட்டது.

வாழ்க! வாழ்க!!

இப்பாடல்களில் உலகம், அதன் ஒரு பாகமாகிய பாரத தேசம், அதன் அங்கமான தமிழகம் இவற்றிற்கு முதலில் வாழ்த்துக் கூறுகிறார் கவிஞர். பின்னர், குடும்ப வாழ்விலும் சமூக வாழ்விலும் சிறப்படைவதற்கு இன்றியமையாத தொழில் முதலியவை சிறந்து, யாவரும் துன்பம் சிறிதும் இன்றி, இன்பமுடன் வாழ்வோம் என்று அறிவுறுத்துகிறார்.

உலகெலாம் = உலகு எ(ல்)லாம்; உலகம் முழுவதும். தமிழகம் = தமிழ் நாடு. மனையறம் = குடும்பவாழ்க்கை புரிபவர்கள் இயற்றும் தருமங்கள். மேழி = கலப்பை. மேழிச்செல்வம் = உழவுத்தொழிலினால் நாம் பெறும் செல்வம். வாணிபம் = வியாபாரம். அச்சம் = பயம். துன்பம் = மெய் வருத்தம். துன்பம் > < இன்பம். துக்கம் = மனவருத்தம்; வருத்தப்படுவதற்குக் காரணமான குறைபாடுகள். துக்கம் > < சுகம். யாவும் = எல்லாம். தெம்பு = வலிமை. தெளிவு = துணிவு, உண்மையறிவு. வாழ்குவோம் = வாழ்வோம்; பாட்டின் ஓசை நிரம்புவதற்காகக் கவி இந்தச் சொல்லை உபயோகிக்கிறார்.

—ஆசிரியர்கள்

